# கல்கி

KALKI 14-3-82 ரூ. 1-80

1. "பொண்ணுக்கு எத்தனை பவுனிலே நகை?.. வளையல் எத்தனை?.. மோதிரம் எத்தனை?.. கம்மல், சங்கிலி எத்தனை போட றீங்க?"
2. நடுவர் "மோதிரம், வளையல் எல்லாம் கிடையாது! சங்கிலி... முப்பதோ... நாப்பதோ போடுவாரு!.. பவுன் கணக்கெல்லாம் அவருக்குத் தெரியாது! அவரை யாருன்னு நினைச்சீங்க? பெரிய "செயின் ஸ்நாச்சர்!.." ஆம்மா!"



# அன்பளிப்பு!

## வெள்ளிக் குத்து விளக்கு

ஒவ்வொரு ரூ. 5000/- டெபாசிட்டுக்கும்

தங்கள் முதலீட்டிற்கு
இதோ ஒரு பொன்னான வாய்ப்பு...

"சுபிட்சத்திற்கு வழிகாட்டி சுமங்கலி"

பெறுவீர் ரூ.10,000/-
48 மாதங்களில்

"சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்"

தங்கள் முதலீடு ரூ.5000/-
இரட்டிப்பாகிறது

**கவர்ச்சிகரமான மாதாந்திர வட்டி வழங்கும் விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன**

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
|---|---|---|
| 16% | 17% | 18% |

குறைந்த டெபாசிட் ரூ.1000/ ஏற்றுக் கொள்ளப்படும்



## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

39, கடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோவில் அருகில்) உஸ்மான் ரோடு, தி.நகர்,
சென்னை-600 017. போன்: 447186

எண்: 2 & 3, முதல் மாடி, சி. எ. ரோடு, தஞ்சாவூர் போன்: 1628
14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன்: 483
24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம்,
பெங்களூர்-560 003 போன்: 24795
9-A, தம்பையா தெரு, பட்டுக்கோட்டை, போன்: 483



C.A. BALOO
Managing Partner

# 4 புதுக் கவிதைகள்






கமிஷன்போடு கமிஷன்போடு என்று
கரடியாய்க் கத்தியதும், போட்டார்
முதல்வர்
ஒரு பால் கமிஷன்.
நெடிய பயணம் நடந்து
கலைஞருக்கு கால் ரணமாகிப்போனதும்
போடச் சொல்வார்களோ
ஒருகால்கமிஷன்?

யார் அதிகம் உசரம்—
அமிதாப்பா சிவாஜியா?
என்று கேட்டான் அம்பி.
சிவாஜி எம்.பி. ஆகிவிட்டதால்
எம்பி எம்பிக் குதித்தாலும் அமிதாப்
எட்டிப் பிடிக்க முடியுமா சிவாஜியை!
என்கிறான் தம்பி.



கேரளத்தில் இதற்குமுன்
நடந்தது மார்க்ஸிஸ்ட் ஆட்சி
என்று எழுதினர் எடிட்டர்.
கம்பாஸிடர் கண்களில்
தூக்கக் கலக்கம்.
அச்சானது—
மார்க் லிஸ்ட் ஆட்சி.




மார்கழியில் மட்டும்தான்
மக்கள் (குளிரில்) நடுங்குவார்களோ?
மந்திரி யோசித்தார்.
எத்தனை கோடி வரிகள் வைத்தாய்
இறைவா! இறைவா! என்று
பாடுங்கள் பஜனை பாவிகளா
என்று தீட்டினர் வரிகள்
கோடி கோடியாய்.

-சாருகேசி

# ஜெட்.. பட்ஜெட்!

ஜெயராஜ்



"என்னம்மா, 'செய்ன் ஸ்னுச்சிங்கா?"

"இல்லீங்க.. என் கையிலே இருந்த பத்து போஸ்ட் கவருங்களைப் பிடுங்கிக்கிட்டுப் போயிட்டான்!"



"பாவி! எருமைக்கடா வாட்டம் 11 வயசாகுதே!

"10 வயசாயிருந்தா இனுமா சத்துணவு கிடைக்குமே!"



"என்னது? பில்டிங் ஃபண்டுக்கு 1000 ரூபாயா!.. போன வருஷம் 500 தானே வாங்கினீங்க!"

"இது பட்ஜெட்டாலே வந்த முன்னேற்றம்! பட்ஜெட்லே சிமெண்ட் விலையை எத்திப் புட்டாங்களே!"



"இன்னுப்பாரு.. இட்லி விலைதான் பெரிசா இருக்கு!.. இட்லி தம்மாத்தூண்டு சிறிசா இருக்கே!"

"யோவ்! ஒனக்குப் புடிக்கல்லேன்னு ஃபைவ் ஸ்டார் ஓட்டல்லே போய்ச்சாப்பிட்டுக்கோ! பட்ஜெட் வரி விலக்கு அங்கே தான்!"



''சும்மா சொல்லப் படாது.. பட்ஜெட்ல ஏனிங்களுக்குத் திடீர் சலுகை அளிக்கப் போறுங்க.பாருங்க!... 1000 கவர் வாங்கினு ஒருகார்டு இரும்னு... திணறடிக்கப் போறுங்க!''





''ஆணி, ப்ளேடு, கண்ணுடித்துண்டு சாப்பிட்டு வித்தை காட்டினியே!.. அந்த மாதிரி டூத் பிரஷ், ஃப்ளாஸ்க், ரப்பர், பென்சில் இதுங்களைச் சாப்பிடப் பழகிக்கணும்பா.. இதுங்களுக் கெல்லாம் தான் வரி கிடையாது!''

''என்ன, பேப்பர் படிக்க இவ்வளவு நாழி? வரி வரியா படிக்கிறீங்களா?''

''பட்ஜெட்ன்னுலே வரி வரியாத்தானே படிக்கும்படியாயிருக்கும்!''






''இன்னுடி ஆச்சு ஒம் புருஷனுக்கு?''

''பேப்பருலே பட்ஜெட் படிச்சாரு!.. அவ்வளவு தான்! வேட்டியைக் கிளிச்சுக்கிட்டுத் தலை யைப் பிறண்டிகிட்டு இப்படிப் பைத்தியம் மாதிரி கத்தருரு!''

''என்ன பண்டாரம்! பட்ஜெட் படிச்சுட்டு எங்களுக்கு மாருக நீ இளிச்சுக்கிட்டு...''

''20000 வருமானம் உள்ளவங்களுக்கு பட்ஜெட்ல வரிச்சலுகையாமே!''



# வட்ட மேஜை



● ஏற்கனவே தபால், போன் கட்டண உயர்வினாலும் ரயில்வே பட்ஜெட்டினாலும் கதிகலங்கிப் போயிருக்கிறோம். நீர்வேறு மக்களை ஜூஸ் பிழிகிற மாதிரி கார்ட்டூன் பிரசுரித்து வரப்போகும் பட்ஜெட்டுக்கு வரவேற்புக் கொடுக்கிறீர்! ஆண்டவன்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்!
விழுப்புரம் கே. எஸ். குமார்

● நகைச் சுவையுடன் சொல்ல ஆரம்பித்த 'நட்சத்திர சந்தோஷங்கள்' வர்ணனையில், திடீரென்று இடையில் மாமியார்த்தனமாக சாடைப் பேச்சு (கிரிக்கெட், கிரிக்கெட்என்று எத்தனை முறை....) வருகிறதே, என்று சந்தேகத்துடன் புத்தகத்தைப் புரட்டினால்.. ஆமாம்! என் யூகம் சரிதான்! கட்டுரையை ஒரு தாய்க் குலம்தான் எழுதியிருந்தது!
சங்கரன்கோயில் டி. மணி

● ''ஆபட்ஸ்பரியில் ஓர் ஆஸ்பத்திரி'' கட்டுரையில் விளம்பர நோக்கின்றிச் சேவை மனப்பான்மையோடு செயலாற்றும் மருத்துவர்களுக்குப் பாராட்டுக்கள். கஸ்டம்ஸ் தரும் கஷ்டத்தை அரசு முன்வந்து போக்கினால் இனியும் பாராட்டும்படியான பலன் கிட்டுமே!
மேட்டுப்பாளையம் எம்.பி. ரத்தினகுமார்

● சிவராமகிருஷ்ணனை 'இந்தியா செலக்டர்கள்' ரிஜெக்ட் செய்து மறந்தாலும் கூட கல்கி மறக்காமல் சரியான சமயத்தில் (இந்திய அணி இங்கிலாந்துக்குத் தேர்வு செய்யும் நேரத்தில்) நல்ல 'கவர் ஸ்டோரி' அளித்தது பாராட்டுதற்குரியது.
கல்கத்தா-26 வெ. பாலசந்திரன்

● ஜெயந்தனின் கிளியில் 'மனம் மெல்ல ஓசையில்லாமல் வேண்டாத பழசிலிருந்து கழற்றிக்கொண்டு அவன் உணர்வில்லாமலே வரதராஜுலு மேல் படர்ந்தது. இவளுக்கு இதுவும் முதல் காதல் போலவே சந்தோஷமாகத்தான் இருந்தது' என்ற வரிகளில் ஆசிரியரின் ஆர்ப்பாட்டமில்லாத அழுத்தமான நடைச் சிறப்பு விளங்குகிறது.
திருவாரூர் ஜெ. ஜெயராமன்

● பெண்கள் வேலைக்குப் போவது பற்றிய கட்டுரை பயனுள்ளதாக இருந்தது. கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் செல்வதால் அவசியமில்லாமல் பணப் புழக்கம் அதிகமாகிறது. (இந்த வேலையை வேலையின்றித் திண்டாடும் குடும்பத்துக்குக் கொடுக்கலாம்) மேலும் குழந்தைகள் தாய் வேலைக்குப் போய்விடுவதால் நிச்சயமாகப் பல வழிகளில் பாதிக்கப்படுகிறார்கள். இதனால் எதிர்காலத்தில் ஆரோக்கியமற்ற மனநிலை கொண்ட சமுதாயம் உருவாகக் கூடும்.
திருச்சி அலெக்ஸ் ஃபெலிஸியா

● கணவனும் — மனைவியும் வேலைக்குப் போவதன் காரணமாக அவர்கள் சில விசேஷ சலுகைகளைப் பெறுவது சமுதாய நீதியைப் புறக்கணிப்பதாக உள்ளது. குறிப்பாக,கணவனும் மனைவியும் ஒரே இடத்தில் பணி புரிய வேண்டும் என்று அரசின் கொள்கையாக இருப்பதால் அவர்கள் தங்களுக்கு எந்த இடம் சாதகமாக இருக்கிறதோ அந்த இடத்தையே நாடுகிறார்கள். இதன் காரணமாக Spouse அல்லாத ஊழியர்களின் நலன் பாதிக்கப்படுகிறது.

இரண்டாவதாக ஒரே வீட்டில் வசித்துக் கொண்டு கணவன் — மனைவி இருவரும் இரண்டு வீட்டு வாடகைப் படி வாங்குகிறார்கள். இது எந்த வகையில் நியாயம்?

வரதட்சணையைப் பொறுத்த மட்டில் பெண்கள் வேலை பார்த்தாலும் வரதட்சணை வேண்டாம் என்று சொல்லக்கூடிய ஆண்கள் சமுதாயம் இன்னும் வளரவில்லை.
மதுரை-7 எஸ். திருமலை

● நல்ல வேலையில் இருக்கும் இளைஞர்கள் கூட சில பல காரணங்களால் எட்டாவதோ எஸ். எஸ். எல். ஸியோ படித்து விட்டு 'வெறுமனே' இருக்கும் பெண்களைத் திருமணம் செய்து கொள்கிறார்கள். அதே வகையில் இந்த வேலைக்குப் போகும் பெண்கள் படித்த பொறுப்புள்ள ஆனால் வேலை இல்லாமல் இருக்கும் இளைஞர்களை ஏன் மணக்க முன்வரக் கூடாது?

மேலும் இந்தியக் கூட்டுக் குடும்பம் என்று போற்றப்படும் நமது பாரத கலாசாரம் சிதைக்கப்பட்டு, 'தனிக் குடித்தனங்கள்' இன்றைய வாழ்க்கையின் 'சகஜமாகி' விட்டதற்கும், மேலை நாடுகளில் 'விவாகரத்து' நெடி இங்கும் தலைதூக்கி விட்டதற்கும் முக்கிய பொறுப்பாளிகள் யார் என்பதையும் வேலைக்குப் போகும் நாரீமணிகள் சிந்திப்பார்களா?
சென்னை-24 ராமாபுரம் சந்துரு

● ஏன் சார், கடைசிப் பக்க 'பொக்கிஷம்' பெரிய புள்ளிகளுக்குத்தானா? ஆண்டாண்டு காலமாக வாசித்து வரும் கல்கி வாசக—வாசகிகளுக்கு(ம்) இல்லையா?
வியாசர் காலனி திருமதி நாராயண ராவ்

புதிய கிளைகள்
திறப்பு விழா!





# ஸ்ரீராம் கைராசி
# உங்கள் பணராசி!

## 10 கிராம் வெள்ளிப்பதக்கம் அன்பளிப்பு!

### மயிலாப்பூரிலும், அண்ணாநகரிலும் எங்களது புதிய கிளைகள் திறப்பு விழா. மார்ச் 21, ஞாயிறு அன்று காலை 9.15

1) மயிலாப்பூர்:
21, கிழக்கு மாட வீதி,
சென்னை 600 004

2) அண்ணா நகர்:
ெ. A 7, அண்ணா நகர்
ரவுண்டாணா அருகில், சென்னை 600 102

- நேரிடையாக, புதிதாகச் சீட்டுகளில் சேரும் எல்லா புதிய அங்கத்தினர்களுக்கும் வெள்ளிப்பதக்கம் *அன்பளிப்பு.
- புதிய அங்கத்தினர்களை அறிமுகப்படுத்தும் ஸ்ரீராம் அங்கத்தினர்களுக்கும், அவர்கள் மூலம் சேரும் எல்லா புதிய அங்கத்தினர்களுக்கும் இந்த அன்பளிப்பு உண்டு.

**இந்த வாய்ப்பு திறப்பு விழா நாள் அன்று மட்டுமே.**

எந்த சீட்டு குரூப்பிலும் நீங்கள் சேரலாம். பலரையும் நீங்கள் அறிமுகப் படுத்திச்சேர்த்து விடலாம். சேரும் புதிய அங்கத்தினர்களுக்கு ஸ்ரீ லக்ஷ்மி திரு உரு பதித்த வெள்ளிப் பதக்கமும், அறிமுகப்படுத்துபவருக்கு ஸ்ரீ விநாயகர் திரு உரு பதித்த வெள்ளிப் பதக்கமும் அளிக்கப்படும்.

ஸ்ரீராம் மேலும் பல இணையற்ற ஆதாயங்களை வழங்குகிறது.
• குறித்த நேரத்தில் உங்கள் தேவைக்குப் பணம் • தனிப்பட்ட இன்முகச் சேவை • பகிரங்க ஏலம் • அதிக டிவிடெண்டுகள்.

• கடன் வசதி!
அங்கத்தினராகி ஓராண்டுக்குப்பின், நீங்கள் செலுத்தியுள்ள தொகைக்கு ஏற்றபடி கடன் பெறலாம்.
வேறு எந்த ஸ்தாபனமும் அளிக்காத சிறப்புச் சலுகைகள்.

மீண்டும் அழைக்கிறோம்! வாருங்கள் எங்கள் புதிய கிளைகளுக்கு.
21.3.82 ஞாயிறு காலை 9.15 முதல் மாலை 7.30 வரை எங்கள் புதிய கிளைகளில் சேரும் அங்கத்தினர்களுக்கு இந்த வெள்ளிப்பதக்கம் அன்பளிப்பு.
விண்ணப்பத்தாள்களை முன்பே எங்கள் கிளைகளில் பெற்றுப்பூர்த்திசெய்து எடுத்து வாருங்கள். வாய்ப்பை நன்கு பயன்படுத்துங்கள்.



**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்**
பதிவு அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001. போன்: 37890 28545.
தி.நகர் கிளை: 54, வடக்கு உஸ்மான் ரோடு, சென்னை 600 017.

*ஸ்ரீ லக்ஷ்மி,
ஸ்ரீ விநாயகர் திரு
உரு பதித்த இப்
பதக்கங்களை
உங்கள் பூஜை
அறையிலும் பணப்
பெட்டியிலும்
பாதுகாக்க உகந்தது.




சீட்டு குரூப்புகள்:

| | |
|---|---|
| ரூ. 125 × 40 மாதங்கள் | ரூ. 5,000 |
| ரூ. 200 × 50 மாதங்கள் | ரூ. 10,000 |
| ரூ. 400 × 25 மாதங்கள் | ரூ. 10,000 |
| ரூ. 625 × 40 மாதங்கள் | ரூ. 25,000 |
| ரூ. 1250 × 40 மாதங்கள் | ரூ. 50,000 |
| ரூ. 2500 × 40 மாதங்கள் | ரூ. 1,00,000 |

• நுழைவுக்கட்டண விகிதங்கள் தனி

**ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள். சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.**

ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் நிரம்பட இயங்கவில்லை என்று பார்லிமெண்டில் நிதி அமைச்சர் ஒப்புக்கொண்டுள்ளார்!






கிராம மக்களுக்குப் பல் பொடி விநியோகிக்கத் தமிழக அரசு திட்டம்!





# பட்ஜெட்: வினாவிடை!


கல்கி
1982 மார்ச் 14
துன்மதி பங்குனி 1
மலர்: 40 இதழ்: 33
தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்


மத்திய, மாநில, ரயில்வே பட்ஜெட்டுகளைப் பற்றிய ஒட்டு மொத்தமான பின்வரும் கேள்விகளுக்கு 'ஆமாம்', 'இல்லை' என்று பதில் கூறுங்கள் பார்க்கலாம்:

'ஏழைமையை நீடிக்கச் செய்வதில் நம்மை மிஞ்ச யாருமே கிடையாது' என்ற உலகப்புகழை பட்ஜெட்டுகள் பொய்யாக்க முற்பட்டிருக்கின்றனவா?

தேசப் பொருளாதாரத்தை ஊக்குவித்து, ஏராளமான புதிய தொழிலகங்கள் உருவாக வழிவகுத்து, உற்பத்தியையும் வேலைவாய்ப்புக்களையும் அதிகரிக்க வாய்ப்பளிக்கின்றனவா?

தேச உடைமையான வங்கிகள் 24,656 தொழிலகங்கள் நோய் கண்டிருக்கின்றன என்று பட்டியல் போட்டிருக்கின்றனவே, இந்த எண்ணிக்கை, குறைய அல்லது அதிகரிக்காமலாவது இருக்க பட்ஜெட் வழி வகுக்கிறதா?

வேலைவாய்ப்பு அலுவலகங்களில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருப்போர் ஒருகோடியே எழுபது லட்சம் பேர். இவர்களில் பாதிப்பேர் படித்தவர்கள். மொத்தம் வேலை இல்லாதோர் எண்ணிக்கை இதைப்போல் மூன்று மடங்கு. இந்நிலை மாற பட்ஜெட்டுகள் உதவப் போகின்றனவா?

சென்ற ஆண்டு மட்டும் மொத்த வியாபாரத்தில் விலை உயர்வு 7.5 சதம். சில்லறை வியாபாரத்தில் விலை உயர்வு 13.5 சதம். நாளுக்குநாள் அதிகரிக்கும் விலைவாசி உயர்விலிருந்து மக்களைக் காக்க பட்ஜெட்டில் உபாயம் உள்ளதா?

நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படைத் தேவைகள் என்று கருதப்படும் சிமெண்ட், மின்சாரம், நிலக்கரி, எஃகு போன்றவற்றில் பற்றாக்குறை நீங்க யோசனைகளை உள்ளடக்கி இருக்கிறதா?

லஞ்ச ஊழல்கள் குறைய கண்ட்ரோல்களை நீக்கி, கூடவே உற்பத்திக்கும் வழி வகுப்பது; கறுப்புப்பணம் ஒழிய வரிகளைக் குறைத்து அதே நேரத்தில் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் உதவுவது போன்ற உருப்படியான காரியம் எதையாவது பட்ஜெட் செய்கிறதா?

60—61ல் 1896 கோடியாக இருந்த அரசாங்கச் செலவினங்கள் இன்று 22,808 கோடியாக உயர்ந்துள்ளதே, இதைக் கட்டுப்படுத்தி பட்ஜெட்டைப் பற்றாக்குறையிலிருந்து மீட்டிருக்கிறாரா நிதி அமைச்சர்? இதன் மூலம் நோட்டு அச்சடிப்பதையும் பணவீக்கத்தையும் கட்டுப்படுத்தியிருக்கிறாரா?

நமது உள்நாட்டு, வெளிநாட்டு கடன் சுமைகள் 70—71ல் 14,043 கோடியாக இருந்து இன்று 46,776 கோடியாக உயர்ந்துள்ளதே, இது குறையவோ மேலும் அதிகரிக்காமலிருக்கவோ கருத்துச் செலுத்தப்பட்டிருக்கிறதா?

நாட்டின் தொழில் துறை சொத்துக்களில் 75 சதம் அரசுத் துறையில் இருந்தும் நாட்டின் மொத்த உற்பத்தியில் 33 சதமே அதன் பங்காக இருக்கிறதே, இந்நிலை மாற ஏதேனும் ஏற்பாடு உண்டா?

நமது தேசத்தின் மிகப் பெரிய செல்வம் மக்கட் செல்வம் தான் என்பதைப் புரிந்து கொண்டு அவர்களை ஆற்றலுள்ளவர்களாக்கவும் அவர்கள் ஆற்றலை நாட்டு முன்னேற்றத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் பட்ஜெட் முன் வருகிறதா?

'ஆமாம்' என்ற பதில்கள் வந்தால்தான் நல்ல பட்ஜெட்டுகள். இல்லை என்ற பதில்களே வருவதால் உதவாக்கரை பட்ஜெட்டுகளே.



## 9

பஸ் நிலையத்தில் இப்போது கூட்டம் அதிகம் சேர்ந்து விட்டது. அந்த முதிய தம்பதிகளின் பின்னால் அவன் நின்றுகொண்டிருந்ததனால் அவர் பார்வையில் அவள் படவில்லை. ஆனால் அவள் அவரை நன்றாகவே பார்த்துவிட்டாள்.

அத்தான் குமரேசன்! அவர் உடம்புக்கு என்ன? திருச்சியிலேயே எத்தனையோ டாக்டர்கள் இருக்கும்போது பூதனூருக்கு ஏன் புறப்பட்டு வந்திருக்கிறார்? ஒரு சமயம்



# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'

அந்த பாலி கிளினிக் டாக்டர்கள் யாராவது தங்கள் காரை அவர் தொழிற் — பட்டரைக்கு ரிப்பேருக்கு அனுப்பியிருப்பார்களோ? இவ்வளவு தூரம் வந்த அத்தான் இப்போ நேரே வீட்டுக்கு வராமப் போக மாட்டார்.

மறு நாள் பள்ளிக்கூட லீவு நாள் என்று மாரப்பனை வரச் சொல்லி யிருந்தாள். முருங்கை மரங்களில் ஏகப்பட்ட காய்கள் தொங்கின. அவரை கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தள்ளிவிட்டிருந்தது. 'புடலங்காயை இனி முற்றவிடக் கூடாது — பறிச்சுடணும்' — அத்தை புலம்பிக் கொண்டிருந்தாள்.

தோட்டத்தைப் பார்க்கக் குமரேசன் புகுந்து விட்டால் போச்சு. ஒரு கூடை நிறையப் பறித்து வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்விடுவார். இருட்டிப் போச்சு, இலைகளைக் கூடத் தொடக்கூடாது பாவம் என்று அத்தை என்ன சொன்னாலும் கேட்கும் ஆசாமியல்ல அவர். முரட்டு மனிதர். பலபல எண்ணிக் கவலையுடன் நின்றாள். அதற்குள் பஸ் வந்து விட்டது. பெரியதொரு கூட்டம் அங்கே இறங்கியதும் காத்திருந்த அனைவரும் விரைவாக உள்ளே ஏறி அமர்ந்தனர். மாலை வேளை அவசரத்தில் டிரைவரும் ஹோட்டலில் டிபன் சாப்பிட உட்காரவில்லை. அருகிலிருந்த டீக்கடையில்

ஆளுக்கொரு சிங்கிள் டீயை வாங்கி வேகமாக அருந்திவிட்டுப் புறப்பட்டு விட்டனர்.

வீட்டுக்குள் நுழைவதற்குள் பொழுது அமிழ்ந்து விட்டது. குரைத்துக்கொண்டு மேலே வந்து விழுந்த ஸாம்சனை அடக்கி விட்டு அவன் பின் பக்கம் சென்று முகம் கை கால்களைக் கழுவிக் கொண்டு கூடத்திலே வந்து ஊஞ்சலில் உட்கார்ந்தான்.

''இன்னிக்கு ரொம்ப நேரமாயிடுச்சே–பஸ் தவறிடுச்சா?'' – அத்தை விசாரித்தபடி காப்பி டம்ளரை அருகில் கொண்டு வைத்தான்.

''அத்தை – இந்தாங்க... ஒரு துண்டு சாப்பிட்டுப் பாருங்க... என் மாணவி ஒருத்தி கொடுத்தான். வீட்டிலே சுத்தமான நெய்யிலே செய்த முறுக்கு'' என்று கூறியபடி பொட்டலத்தை அவிழ்த்து முறுக்கை ஒடித்தான்.




*மங்கையர்
விரும்பும்
நன்மலர்

''நீ சாப்பிடும்மா... நான் இப்பத்தான் காப்பி டிபன் முடிச்சேன்'' என்று கூறிவிட்டு அத்தை வேலைகளைக் கவனிக்க உள்ளே சென்று விட்டாள்.

ஒரு துண்டு முறுக்கை வாயில் போட்டு மென்று கடித்துச் சுவைத்துத் தின்றுவிட்டு காப்பியைக் குடித்தபடி வாயிலைப் பலமுறை பார்த்தாள். பொழுது மறைந்து நன்றாக இருட்டத் தொடங்கி விட்டது. இனி அத்தான் வரமாட்டார் என்ற உள்ளுணர் வின் துணிவில் அவள் வாயில் கதவைச் சாத்திவிட்டுக் கூடத்துக் குழல் விளக்கைப் போட்டாள்.

'ஆமாம். அத்தான் பூதலூருக்கு எதுக் காக வந்திருப்பார்? — டாக்டர் ஸ்ரீதரனிடம் ஏதாவது ஏடாகூடமாகப் பேசித் தொலைக் கப் போகிறார். இங்கிதம் தெரியாத மனிதர் அவர்.

ஊஞ்சலில் உட்கார்ந்தாள். அது மெல்ல அசைந்தது.

'காதலைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் டீச்சர்'... என்று கிரீச்சிடுவது போல ஊஞ் சலின் சங்கிலிக் கொக்கி அசைந்தபோது ஓசையிட்டது. காதல் என்ற வார்த்தையைக் கேட்டதுமே அவளுக்குக் ஸ்ரீதரன் நினைப்பு ஏன் உடனடியாக ஏற்பட வேண்டும்? மனம் ஏன் இப்படிப் பரவசப்பட வேண்டும்? மார்பு ஏன் துரிதமாகத் துடிக்க வேண்டும்? ஏன்? ஏன்?

கூடத்தில் அருகருகே பாய்களை விரித்துத் தலையணைகளைப் போட்டுவிட்டு மின் விசிறியைச் சுழலவிட்டாள் சந்தியா.

அப்பா இறந்தபின்னர் அவர்கள் ஸாம்சன் துணைக்கு வீட்டுக்குள்ளேயே நடையை ஒட் டித் தாழ்வாரத்தில் படுக்க வைத்துக் கொள் வது வழக்கமாகிவிட்டிருந்தது.

ஒரு பீங்கான் பேஸினில் தண்ணீரை நிறைத்துச் சுவர் ஓரமாக வைத்துவிட்டு, சாக்கு விரிப்பை உதறித் தாழ்வாரத்தில் போட்டதும் ஸாம்சன் ஓடிவந்து அதன்மீது சுருண்டுகொண்டு விட்டது.

சமையல் அறைக் காரியங்களை முடித்து விட்டு வெண்கலச் செம்பில் குடிநீரும் டம்ள ரும் எடுத்து வந்து மேஜை மீது வைத்து விடி விளக்கை எரிய விட்டாள். மெலிதாகக் கூடத்தில் பரவி நின்ற அதன் வெளிச்சத்தில் அத்தை இன்னமும் உறங்கவில்லை என்பது தெரிந்தது.

''அத்தை! இன்னிக்குப் பூதலூர் கடைத் தெரு பாலி கிளினிக்குக்கு அத்தான் குமரேசன் வந்ததைப் பார்த்தேன்....'' சொல் லிக்கொண்டே தலையணை மீது சாய்ந்தவாக் கில் படுத்தாள்.

''குமரேசனுக்கு அங்கே என்ன வேலை?... ஒரு சமயம் அந்த டாக்டர் பையன் ஸ்ரீ தரனைப் பார்த்து ஏதாவது கண்டிப்பாகப் பேச வந்திருந்தானு?''

''எனக்குக்கூட அப்படித்தான் அத்தை தோணிச்சு. ஏதோ பாவம் ஆபத்துக்கு நாம கூப்பிட அவர் வந்து உதவினுர். அவ ரிடம் போய் முரட்டுத்தனமாகப் பேசி இந்த அத்தான் நம்ப மரியாதையைக் குறைச் சுடுவாரோன்னு கவலையா இருக்கு'' என் ருள் சந்தியா.

அத்தனை நேரம் தனக்குள்ளே எண்ணிச் சஞ்சலத்தில் உழன்று தவித்த அந்த விஷ யத்தை அத்தையிடம் கொட்டி விட்டதும் மனம் லேசாகி விட்டது போன்றிருந்தது அவளுக்கு.

''டாக்டர் செந்தில்நாதனுக்கு வய சாயிடுச்சு. அத்தோட முன்கோபம் வேறே. சட்டுனு அவசரத்துக்கு அசைய மாட்டார் மனுஷன். உங்கப்பனுக்கு உடம்பு முடி யாமப் போனப்போ அந்த ராத்திரி நான் எப்படிப் பதறிப்போய் ஓடி அவரைக் கூட் டிக்கிட்டு வந்தேன் ஞாபகம் இருக்கா?''

''கதவைத் தட்டி உங்க கையே ஓஞ்சு போன பிறகு வெளியே வந்து எட்டிப் பார்த்துட்டு, 'நான் ராத்திரி வேளையிலே வரதில்லைன்னு தெரியாதா'ன்னு உங்கிட்ட எரிஞ்சு விழுந்தார். அவரைக் கெஞ்சி நீங்க கூட்டிக்கிட்டு வரதுக்குள்ள அப்பா வலி யிலே துடிச்சதை இப்ப நினைச்சாலும் எனக்கு அழுகையா வரது அத்தை....''

''கிடக்கான் குமரேசன்... நீ கவலைப் படாதே... நான் நாளைக் காலை—டாக்டர் ஸ்ரீதரன் கிட்ட ஏதோ மருந்து எழுதி வாங் கிட்டு வரப் போறாப்பல போய்க் கண்டுக் கிட்டு வாரேன்....''

''ஏடாகூடமாகக் குமரேச அத்தான் அவர் கிட்டப் பேசியிருந்தா?''

''குமரேசனின் முரட்டு சுபாவத்தை விளக்கிட்டு அவர் கிட்ட மன்னிப்புக் கேட் டுப்பேன். ஸ்ரீதரன் நல்ல பிள்ளை. நம்மைப் புரிஞ்சுக்குவான்....'' என்று சமாதானம் சொன்னாள் ஜகதா.

ஆனாலும் வெகு நேரம் உறங்காது சந் தியா அதைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

''அத்தான் குமரேசன் பூதலூருக்கு டாக்டர் ஸ்ரீதரனைக் கண்டிக்கப் பேசவா வந்தார்?....

சட்னி

தயிர்

மில்க் ஷேக்

மசாலா

இப்போது... அடுத்தடுத்து
எதை வேண்டுமாயினும்
அரைக்கலாம்... கலக்கலாம்!

பஜாஜ் மிக்ஸிகள், உங்கள் சிரமத்தை மட்டுமன்றி நேரத்தையும் சேமிக்கும் வண்ணம் உருவாக்கப் பட்டுள்ளன. இரண்டு தனி ஜார்கள்...ஒன்றல்ல எனவே மசாலா பொடித்த கையுடனேயே தயிர்... கடையலாம்...ஒன்றின் மணம் மற்றொன்றை பாதிக்காத வண்ணம். கட்டுறுதியான மோட்டார் இருப்பதால் தொல்லையற்ற இயக்கம். [illegible] அரைத்தாலும் பொடி செய்தாலும் நன்கு அரைக்கும் வண்ணம் விசேஷமான கோணத்தில் அமைந்த பிளேடு. பஜாஜ் மிக்ஸிகள் பல மாடல் களில் கிடைக்கின்றன. எல்லாமே ஐஎஸ்ஐயின் கடுமையான விதிகளுக்குட்பட்டுத் தயாரானவை... பஜாஜின் சீரிய தரத்திற்கும் உட்பட்டுத்தான். மிக உன்னத விற்பனைக்குப்பின் சேவைக்கென இந்தியாவெங்கும் 3500க்கும் மேற்பட்ட விற்பனையாளர் அணியைப் பின்பலமாகக் கொண்டது. இவை போன்ற காரணங்களால்தான் அப்ளையன்ஸ்களின் முடிசூடா மன்னராக விளங்குகிறது பஜாஜ்.



சிறந்ததையே பஜாஜ்
வாங்குவீர் வாங்குவீர்

Heros-BE-593 TAM

மறுநாள் காலை அவள் விடியு முன்பே எழுந்து குளியலை முடித்துக் கொண்டு தயாராகி விட்டிருந்தாள். மாரப்பனுடன் காய்களைச்சேகரிக்கக் கூடைகளுடன் தோட்ட வேலைகளைக் கவனிக்கப் புறப்பட வேண்டியிருந்தது.

அன்று சேகரித்த காய்கறிகள் வழக்கத்துக்கு மேல் அதிகமாக இருந்ததைக் கண்டு மனம் பூரித்துப் போனாள்.

கடந்த சில நாட்களாக.... டவுன் கடைகளில் விலை கூடிவிட்டிருந்தது. கட்டாயம் அவர்களுக்கு இந்த முறை கொஞ்சம் அதிகமாகப் பணம் கிடைக்கும். கூடத்து அறை ஒன்றின் கூரை ஓடுகள் நகர்ந்து ஓட்டையொன்று தெரிகிறது. மழைக்காலத்தில் ஒழுகத் தொடங்கிவிடும். அதை இப்பவே சீர் செய்ய ஏற்பாடு பண்ண வேண்டும். கட்டட வேலையாட்கள் இப்போது அதிகமாகப் பணம் கேட்கிறார்கள்.ஓடுகளின் விலையும் கூடி விட்டிருக்கு.... பற்பல எண்ணியபடி அவள் மாட்டுக் கொட்டில் அருகே சென்றாள். கிணற்று மேடைக்கப்பால் தோட்டத்திலே ஓங்கி உயரமாக வளர்ந்திருந்த வேப்ப மரத்தின் கிளைகள் நீண்டு பரவி இலைகளைத் தண்ணீரில் உதிர்ப்பதைத் தவிர்க்க மாரப்பன் சில கிளைகளைக் கழித்து விடக் கத்தியுடன் மரத்தில் ஏறினான். அதற்குள் சுள்ளென்று வெய்யில் கிளம்பி விட்டிருந்தது.

''ஆச்சு இதை முடிச்சுட்டு நான் புறப்பட வேண்டியதுதான். மாசம் பொறந்து நீங்க சம்பளம் வாங்கின பிறகு என் சம்பளத்தை ஒட்டுமொத்தமாக் கொடுங்க... அப்பப்ப கொஞ்சமா வாங்கிட்டுப் போனா அப்படியே கரைஞ்சு போயிடுது'' என்று சொல்லிக்கொண்டே வேகமாகக் கிளைகளைக் கழித்துக் கொண்டிருந்தான்.

மாட்டுக்கும் கன்றுக்கும் புல்லை அள்ளிப் போட்டுக் கொண்டு நின்ற சந்தியா மளுக்கென்ற பலத்த சப்தத்தைக் கேட்டுத் திரும்பினாள். தன் கத்தியைக் கூர்பார்க்க ஆரம்பத்திலே அடிக் கிளை ஒன்றைச் சிறிது வெட்டிவிட்டிருந்தான் மாரப்பன். தவறி அதில் காலை வைத்து நிற்க முயன்றபோது அவனது கனம் தாங்காது கிளை முறித்துக் கொண்டு தொப்பென்று கிளையுடன் அவன் கீழே விழ, கிணற்று மேடையின் ஓரம் அவன் மண்டையைத் தாக்க 'ஐயோ அம்மாடி' என்று அலறிவிட்டான். நெற்றி முடி ஓரத்திலே பெருகிக் கன்னங்களில் வழிந்த ரத்தத்தைக் கண்டு நடுங்கிப் போனாள் சந்தியா.

இதென்ன கஷ்ட காலம்... மறுபடியும் ஒரு விபத்தா? மாரப்பன் போன்ற ஏழைத் தொழிலாளிக்கு அவர்கள் வீட்டு வேலையின் போது இப்படி ஒரு துன்பம் நேர வேணுமா?

''அத்தை!.... — கூச்சலிட்டுக் கொண்டு அவள் உள்ளே ஓடினாள்.

மாரப்பன் எழுந்து தன் முண்டாசினால் தன் நெற்றியை அழுத்திக் கட்டிக்கொள்ள முயன்றவன் கைமீது சொட்டிய ரத்தத்தைக் கண்டு மயங்கிப்போய்விட்டான்.

தோட்டத்தின் பின் பக்கம் வந்து எட்டிப் பார்த்த அத்தை அவனருகே வேகமாக ஓடிவந்தாள்.



எஜமான் : நீ வேலைக்கு வேண்டாம்!

வேலையாள்: நான் என்ன கவர்னரா? வேலைக்கு வேண்டாமுன்னு சொன்னவுடன் போய்விட. சட்டப்படி மூணுமாத நோட்டீஸ் கொடுக்கணும் தெரியுமா?

எஜமான்: ...?

— சந்தானம் —

''இங்கே வா சந்தியா... ஆபத்துக்குத் தவறில்லை...இவனைக் கொஞ்சம் தூக்கி நிழலில் போடுவோம்'' என்றாள்.

இருவரும் சிரமப்பட்டு மாரப்பனை மர நிழலில் இழுத்துப் போட்டனர். அத்தையம்மாள் முண்டாசைக் கிழித்துத் தலைக்கு ஒரு கட்டுப் போட்டாள். பம்பு செட் நீரில் கொஞ்சம் குவளையில் பிடித்துக் கையைக் கழுவிக் கொண்டு மீதியை எடுத்து வந்து அவன் முகத்தில் தெளித்தாள். ''இந்தா நீயும் போய்க் கையைக் கழுவிக்கிட்டு ஓடி இவனுக்குச் சூடா கொஞ்சம் ஓவல் ஏதாச்சும் கலந்து கொண்டுவந்து கொடு. நான் போய் டாக்டரைக் கூட்டி வரேன்...'' கூறிவிட்டு அவிழ்ந்து முதுகில் புரண்ட கூந்தலை அள்ளி முடித்துக் கொண்டு வாசலுக்கு ஓடினாள்.

மாரப்பன் கண்களை விழித்து இவளை மெல்லப் பார்த்தான்.

''சின்னம்மா! இடுப்பிலே நல்ல அடி... நோவுதும்மா....'' முனகினான்.

உள்ளேயோடிச் சென்று சந்தியா அவனுக்குச் சாப்பிடக் கொஞ்சம் ஓவல் தயாரித்துக் கொண்டு வருவதற்குள் ஸாம்சன் உற்சாகமாகக் குரைத்துக் கொண்டு தோட்டத்தில் இங்கும் அங்கும் ஓட வாசலில் வந்து நின்ற மோட்டார் சைக்கிளிலிருந்து மருந்துப் பெட்டியுடன் ஸ்ரீதரன் இறங்கி உள்ளே வந்து ஒரே எட்டில் தோட்டத்தை அடைந்து விட்டான்.

அவளிடமிருந்த தம்ளரை வாங்கி மாரப்பன் தலையை நிமிர்த்தி அவனை உபசரித்துக் குடிக்க வைத்தான்.

''நீங்க உள்ளே போகலாம். நான் அவரைக் கவனிச்சுக்கிறேன்... ரத்தத்தைப் பார்த்தால் சிலருக்கு மயக்கம் வந்துடும்.'' என்று அவன் சிரித்தபடி உத்தரவிட்டான்.

(தொடரும்)

# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...




SIMOES/BC/MAT/ 5/81

# சந்தையிலே ஒரு பெண்!

ஜெயவண்ணன்

மண்வெட்டியைத் தூக்கிச் சர்வ அலட்சியமாய்த் தோளில் மாட்டிக் கொண்ட மாணிக்கம் களத்து மேட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

மனத்தில் வெறுமையின் பூரண ஆக்கிரமிப்பு!

சே! என்ன வாழ்க்கை இது!

செங்கமலம் இல்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?

பிறந்த வீட்டுக்குப் போன செங்கமலம் சும்மாவா போனாள்? அவனிடமிருந்து மகிழ்ச்சி, நிம்மதி, நிறைவு, திருப்தி எல்லாவற்றையும் தன்னுடன் அள்ளிக் கொண்டு சென்றுவிட்டாளே!

அவளுடன் வாழ்ந்த அந்த நாட்களை அவன் மனம் சுகமாக அசை போட...

கரும் புள்ளி போட்ட கண்டாங்கியை முழங்கால்வரை தூக்கிக் கட்டிக் கொண்டு டிபன் காரியருடன் தங்க ரதமாய்க் களத்து மேட்டுக்கு ஆடி அசைந்து வருவாள் அவள். பின், குருத்து வாழை இலையை விரித்துப் போட்டு அவன் முன்னே உணவைப் பரிமாறுவாள். அப்புறம்?

சாப்பிடும்போதே அருகே அமர்ந்திருக்கும் அவள் பின்னலை இழுக்கும் சாக்கில் அவள் கழுத்தையும், பின் ரவிக்கையின் மேல்புறத்தைக் கடந்து, வெறுமையாய்ப் பளிச்சிடும் முதுகின் கீழ்ப்புறத்தையும் வருடும் அவன் கரம்.

அவன் கரத்தைப் பட்டென்று அவள் தட்டிவிட, அவன் சிரித்துக் கொண்டே எழுந்து, அருவியாய்க் கொட்டும் பம்பு நீரில் கையைக் கழுவிக் கொண்டு வருவான்.

அந்தச் செங்கமலம் இப்போது இங்கே இல்லை. பிறந்த வீட்டுக்குப் போய்விட்டாள்.

இதற்குக் காரணமான அப்பா மருதமுத்துவை நினைக்கும்போது அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

விஷயம் என்னவோ சாதாரணமானது தான். செங்கமலத்தின் திருமணத்துக்குச் செய்வதாகச் சொல்லியிருந்த எல்லாச் சீர்களையும் அவள் அப்பா வடிவேல் செய்திருந்தார். ஆனால் வில் வண்டி ஒன்றும், மணப்பாறை மாடு ஒரு ஜோடியும் திருமணத்தின்போது சீராகத் தருவதாகப் பேச்சு. குறுவை அறுவடை முடிந்ததும் சொன்னதைச் செய்கிறேன் என்று வாக்குக் கொடுத்திருந்தார்.

மருதமுத்துவும் சரியென்றுகூறவே திருமணமும் நல்லபடியாக நடந்தது.

அடுத்த ஆறுவது மாதம்....

வண்டி மாடுகளைப் பற்றி வடிவேலுவிடம் நினைவூட்டினார் மருதமுத்து.

''சம்பந்தி! நாலு நாளா பெஞ்ச பேய் மழையிலே பாப்பையன் ஏரி உடைப்பு எடுக்கும்னு, தலைமடையான என் பயிர் எல்லாம் நாசம் ஆகும்னு நான் நினைக்கவே இல்லே. குறுவைக்காக சொஸைட்டியில் வாங்கின கடன் இரண்டாயிரம் ரூபாய் அப்படியே நிக்குது. வயலிலே குவிஞ்சு கிடக்கிற ஏரி மணலை எப்படி அப்புறப்படுத்தறது. சம்பாவை எப்படி நடறதுன்னு புரியாமத் தவிச்சுக்கிட்டு நிக்கறேன். இந்த நேரத்திலே வண்டி மாட்டுக்காக ரெண்டாயிரம் ரூபாயை நான் எப்படிப் புரட்டுவேன்?''

அவர் சொன்ன காரண காரியங்களை ஏற்க மருதமுத்து தயாராக இல்லை.

''உம்ம பொண்ணை நீரே கூட்டிக்கிட்டுப் போவும். வண்டி மாட்டை என்னிக்கு உம்மாலே வாங்க முடியுதோ, அன்னைக்கு அவளை அதே வண்டியிலே இங்கே அனுப்பி வையும்''

எனவே, செங்கமலம் பிறந்த வீட்டுக்குப் போய்விட்டாள்.

மாணிக்கம் நாட்களை வெண்டா வெறுப்பாக எண்ணிக் கொண்டிருந்தான்.

இதற்கு விடிவு காலம்தான் எப்போது?

அன்று...

அந்தி மயக்கத்தில் பகல் பொழுது சரியத் தொடங்கிய மாலை நேரம்...

பூத்துக் குலுங்கியிருந்த சம்பா நெற்பயிரைக் கண்களால் நிறைவோடு பார்த்துக்கொண்டு வரப்பில் நடந்து கொண்டிருந்தார் மருதமுத்து.

பம்பு செட் அருகே வந்ததும் அவர் கண்கள் பம்பு செட் இருந்த அறையின் கதவின்மேல் பதிந்தன.

கூட்டுக்குருவி ஒன்று பயம் கலந்த விழிகளால் மருதமுத்துவைப் பார்த்து விழித்துக் கொண்டிருந்தது. அந்தக் கூட்டுக்குருவிக்கு வயது இருபது இருக்கும். அது, சேலை கட்டி, ரவிக்கை போட்டிருந்தது.






"ஐயா! என்னை ஒண்ணும் செய்துடாதீங்க. உங்க மகன் மாணிக்கம்தான் என்னை இங்கே வரச் சொன்னாரு" என்றாள்.

"மாணிக்கமா?"

"ஆமா. அவரு பொஞ்சாதி செங்கமலத்தை அதோட பிறந்த வூட்டுக்கு அனுப்பிட்டீங்களாம். சொன்னபடி வண்டி மாடு வாங்கச்செங்கமலம் அப்பாவுக்கு வசதி இல்லையாம். அது திரும்ப வரும் என்கிற நம்பிக்கை அவருக்கு இல்லையாம். நீங்களும் உங்களோட பிடிவாதத்தை விடப் போறதா தெரியலையாம்."

"அதனாலே?"

"போன வாரம் செம்பட்டுச் சந்தையிலே உங்க மகன் என்னைப் பார்த்தாரு. 'என்னை ரெண்டாந் தாரமா கல்யாணம் பண்ணிக்கிறியா'ன்னு கேட்டாரு. இன்னைக்கு இங்கே வந்து பாருன்னு சொன்னாரு. அதனாலே தான் வந்தேன்."

மடியிலிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவளிடம் நீட்டினார்.

"பணமா? எனக்கு எதுக்கு ஐயா?"

"இதைச் செலவுக்கு வச்சுக்கோ. வந்த சுவடு தெரியாம நீ உன் ஊருக்கு ஓடிடு."

"ஐயா...."

"உன்னைப் பார்த்தா நல்ல பொண்ணாத் தெரியுது. நல்ல நேரத்திலே நீ என் கண்ணிலே பட்டுட்டே. என் குடும்ப மானமே இப்போ உன் கையிலேதான் இருக்கு. நான் இன்னைக்கே ஊருக்குப் போறேன். வண்டியும் வேணும் மாடும் வேணும். நீ வந்தாப் போதும்னு சொல்லி என் மருமகளைக் கூட்டிக்கிட்டு வந்துடறேன். நீ மட்டும் என் மகன் வாழ்க்கையிலே குறுக்கிடாமல் திரும்பிப் போய்விடு தாயே!" என்று தழுதழுத்த குரலில் கூறிய மருதமுத்து இரு கரங்களையும் குவித்தபடி அவளெதிரே போய் நின்றார்.

"ஒரு நல்ல குடும்பத்தைக் கெடுக்கும் கோடாரிக் காம்பா என்னைக்கும் நான் மாற மாட்டேன். வர்றேன் ஐயா" என்று கூறி விட்டு மறைந்தாள் அவள்.

மருத முத்து தெளிந்த மனத்துடன் வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

ஏரிக் கரையருகே நடந்து வந்த அந்தப் பெண்ணைக் கரத்தை நீட்டித் தடுத்து நிறுத்தினான் மாணிக்கம்.

அந்தப் பெண் — வடிவு — சற்று முன் நடந்ததை அவனிடம் சொன்னாள்.

"வடிவு, நான் சொன்னபடியே நீ நல்லா நடிச்சுட்டே. என் திட்டத்துக்கு உடந்தையா உன்னை இங்கே அனுப்பி வச்ச என் நண்பன், உன் அண்ணன் ராமுவுக்கும் திறமையா நடிச்சு என் அப்பாவுக்கு நல்ல புத்தியை வரச் செய்த உனக்கும் நான் என்றைக்கும் கடமைப்பட்டிருக்கேன்" என்ற மாணிக்கம் நன்றியுடன் அவளைப் பார்த்தான்.

"எப்படியோ, உங்க அப்பா மனம் திருந்திட்டாங்க. செங்கமலமும் திரும்பி வரப் போகுது. அதுவே எங்களுக்குப் பெரிய திருப்தி" என்ற வடிவு, "நான் வரேன் அண்ணே! அண்ணன் எனக்காகக் காத்துக்கிட்டு இருக்கும்" என்று கூறிவிட்டு ஏரிக் கரையில் நடக்கத் தொடங்கினாள்.

உள்ளமெங்கும் நன்றிப் பிரவாகமெடுத்து ஓட, வடிவு நடந்து செல்வதையே பார்த்தபடி நின்று கொண்டிருந்தான் மாணிக்கம்.

# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.






"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.

## திட்டமிட்ட பரிபூரண உணவு
# காம்ப்ளான்®

லின்டாஸ். GLC. 10-2015 TM

# 9

**ம**துரையை நோக்கிச் செல்கின்ற அந்த அகன்ற ராஜ பாட்டையில் மாநகரை நெருங்க, நெருங்கப் போக்கு வரத்து அதிகரித்துக் கொண்டே போனது என்றாலும் அவற்றில் கலந்துவிடாமல் தனித்தும் ஒன்றை யொன்று முந்தாமலும் ஐந்து குதிரைகள் சீரான நடை போட்டன. அவற்றுள் முன்னதாகச் சென்ற இரு குதிரைகளில் குவளையும் சீனனும் ஆரோகணித்திருக்க, அடுத்ததாக வந்த இரு குதிரைகளை அப்போதுதான் மீசை முளைக்கத் தொடங்கியிருந்த குவளையின் தம்பி ஒருவனும் குவளையின் [illegible]தியும் செலுத்தி வந்தனர். கடைசியாகத் தனித்து வந்த ஐந்தாவது குதிரையில் ஏறி இருந்தவன் குவளையின் தகப்பன் கொம்மையன்.

குதிரைகளை அவர்கள் இப்போது விரட்டாது அவற்றின் போக்கில் நடக்க விட்டிருந்தனர். நீண்ட தூரம் பயணம் செய்த களைப்பு அவர்களை மட்டுமின்றிக் குதிரைகளையும் பற்றியிருந்தது. சூரியன் மேற்குத் திசை வானில் கீழிறங்கி மெல்ல மெல்லப் பூமியுடன் சங்கமித்துத் தன்னை இழந்து கொண்டிருந்தான். இருந்தாலும் இருள் சூழுமுன்னர் மதுரை மாநகரை அடைந்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் புரவிகளை நிதானமாகவே நடக்க அனுமதித்தனர்.

சாலையோர மரங்களின் நிழல்கள் நீண்டு வந்தன. மாலை நேரத் தென்றல், ஏரிகள் குளங்கள் மீதாகவும் பசுமையான வயல்கள் மீதாகவும் தவழ்ந்து வந்து அவர்களைச் சில்லென்று சூழ்ந்தபோது இதமாகக் களைப்புத் தீர்க்கும் அருமருந்தாக இருந்தது: வியர்வை அடங்கியது: ஆனால் குவளையின் மனம் எங்கே அடங்கியது? அது தறிகெட்டு எங்கெங்கோ சென்றது. அதைக் கட்டுக்குள் கொண்டு வரவும் அவன் விரும்பவில்லை. மாறுகப் பல சம்பவங்களைப் பற்றியும் சங்கதிகளைக்



# ரவிகுல திலகன்

**செம்பியன்**

குறித்தும் சிந்திக்க வேண்டும் என்பதற்காகவேதான் சீனனுடன் மற்றவர்களுக்கு முன்னதாக அவள் தன் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்தாள். தன் தோழிக்குப் பக்கத்திலோ அல்லது தம்பி, தந்தை இவர்கள் அருகிலேயோ குதிரையைச் செலுத்திவருவதெனில் அவள் அவர்களுடன் பேசிக் கொண்டு வருவதைத் தவிர்க்க முடியாது. ஆனால் இப்போதோ இந்த ஊமைச் சீனனுடன் பேச்சுக் கொடுக்க அவசியமும் இல்லை; அவன் கூறுவதைக் கேட்டாக வேண்டிய நிர்ப்பந்தமும் இல்லை. அவள் தன்பாட்டுக்குத் தன் நினைவுகளில் ஆழ்ந்து போகலாம். கடந்த பல நாட்களில் நடந்த வியப்பும் திகைப்புமான சில முக்கிய சம்பவங்களை அசை போட்டவாறும் அடுத்த சில தினங்களில் நடக்க வேண்டியவற்றை எப்படிச் சாதிப்பது என்று சிந்தித்தவாறும் பயணப்படலாம். இந்த விதமாகத் திட்டமிட்டேதான் அவள் இப்படித் தன்னையும் மற்றவர்களையும் வரிசைப்படுத்தி விருந்தாள். நினைவுகளும் வரிசைப்பட்டன.

காதலனுக்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்து இன்பமாகப் பொழுதைக் கழிக்க வேண்டும் என்ற ஆசையுடனும் தீர்மானத்துடனும் தன்னை அலங்கரித்துக் கொண்டு பல்க்கில் ஏறி அவள் புறப்பட்ட அன்றைய இரவு எத்தனை வியப்பு திகைப்புக்களை உள்ளடக்கியதாய் விளங்கியது!

சுரங்க வழியாகச் சோழ மாளிகையில் விஜயாலயனின் இருப்பிடப் பகுதியை அடைந்த அவள், அவனுடன் பேசிய அந்தரங்கமெல்லாம் நாட்டின் எதிர்காலம் பற்றியதாக இருக்க, அதிலேயே இருவர் மனமும் ஒன்றிப்போக, அங்கே அறிவுக்குத்தான் வேலை இருந்ததே யொழிய அனங்கனுக்கு வேலை இல்லாது போயிற்று! அணி மணிகளும் அலங்காரங்களும் களையப்படாமலும் கலைக்கப்படாமலும் அப்படியே இருக்க விடியும் நேரத்தில் வந்த வழியாகவே திரும்பினாள்.



அவ்வாறு விஜயாலயனின் சிந்தனையை முழுமையாகத் திசை மாற்றி விட்ட நிகழ்ச்சியையும் அவன் எண்ணிப் பார்த்தான். ''இந்தத் திரைச் சீலையையும் கூடவே இதன் பின்னால் ஒளிந்திருப்பவனையும் தங்கள் இடையில் உள்ள கூரிய வாளால் குத்திக் கிழித்துவிட வேண்டியதுதானே'' என்று அவன் கூறவும் விஜயாலயன் வாளை உருவினான். அந்த ஒலி எழுந்த மறு கணமே ''பிரபோ! என்னை மன்னியுங்கள்!'' என்று கெஞ்சியபடியே இளவல் காலடியில் விழுந்து அவன் பாதங்களைப் பற்றிக் கொண்டான் ஆகவமல்லன். எண் சாண் உடலாக விழுந்த அவன் கழுத்திலே வாளின் கூரிய முனை பதிய அதை ஒரு விரலால் உச்சியில் பற்றிப் பம்பரமாய்ச் சுழற்றியபடி விஜயாலயன் காரணம் கேட்க, ஆகவமல்லன் கூறிய பதில் வேடிக்கையாக இருந்தது. யாரோ அங்கு சுரங்க வழியாக வரப்போவதாக அவன் சந்தேகித்தானாம். அரண்மனை வாகன மண்டபத்திலிருந்து ஒரு பல்லக்கையும் அதைச் சுமக்கவல்ல நால்வரையும் பெற்றுச் சென்ற சீனனின் செயல் அவனுக்கு ஐயத்தை எழுப்பியதாம். ரகசியமாய் இளவரசரைச் சந்திக்க வருவது யாராயினும் அந்த நபரால் கோமகனுக்கு ஆபத்து ஏதேனும் நேர்ந்து விடக் கூடாதே என்ற கவலையால்தான் அங்கே ஒளிந்திருந்தானாம்! தன் கடமையைத் தான் நிறைவேற்றியதாக அவன் சாதிக்கவும் விஜயாலயன் சிரித்தான். ''அப்படியானால் சில காலம் முன்பு நீ





பல்லவ மாளிகை சென்று பாராசிரயனைச் சந்தித்துத் திரும்பியதும் கூட...'' என்று ரவிகுல திலகன் வாக்கியத்தை முடிக்காமல் நீட்டவும்,

தரையில் கிடந்த நிலையிலும் ஆகவ மல்லன் திடுக்கிட்டு நடுங்க, அந்த அசைவினால் வாளின் கூர்முனை புறத் தோலைப் பதம் பார்த்துச் சற்றே தைக்க, குருதி குபுக்கென்று பீறிட்டு வடிந்து கழுத்துக்குப் பவழ மாலை அணிவிக்கப்பட்டது போல் தோற்றமளித்தது.

அந்த எரிச்சலைப் பொருட்படுத்தாது ஆகவமல்லன், ''பிரபோ! அதுவும் தங்களுக்குத் தெரியுமா?'' என்று வியப்புடன் வினவினான்.

''துரோகிகளுக்குத் தர வேண்டிய தண்டனை பற்றியும் தெரியும்'' என்றான் விஜயாலயன்.

''இளவரசே! என்னைத் துரோகி என்று நீங்கள் தீர்மானித்து விட்டீர்களென்றால் மெய்யாலுமே நான் துரதிர்ஷ்டசாலிதான்'' என்றான் ஆகவமல்ல தன் நிலையிலிருந்து மாறாமல்.

''ஓ! என் கணிப்பு தவறு என்கிறாயா? அப்படியானால் பாராசிரயனின் மனத்தைத் தெரிந்துகொண்டு முன்னெச்சரிக்கையாகச் செயல்படத்தான் அவர் வலையில் விழுந்து விட்டதுபோல் நீ நடித்தாயாக்கும்!''

''ஆம் பிரபோ! அவர் எனக்குப் பதவி ஆசை காட்டிவிலைக்குவாங்கவும் பார்த்தார். நானும் என் ராஜ விசுவாசத்துக்கு விலை நிர்ணயிப்பது போல் நடித்தேன். காரணம் தங்களுக்குத் தெரிந்ததே. அவர் என்னை விலைக்கு வாங்கப் பார்க்கிறார் எனில் எதற்காக என்று தெரிந்து கொள்வதும் ஒற்றர் தலைவனின் கடமைதானே! தங்கள் நலனைக் கருதியே அவ்விதம் நடந்து கொண்டேன்!''

''நடந்து கொண்டதில் என்ன தெரிந்து கொண்டாய் ஆகவமல்லா?''

''தங்களையும் தங்கள் வீரத்தையும் சக்கரவர்த்தி போற்றி மதிக்கிறார். அதனால் பொறாமையுற்ற பாராசிரயன் தாங்கள் பல்லவேந்திரருக்கு எதிரான காரியங்களில் ஈடுபடுவதாக அவரை நம்ப வைக்க முயன்று கொண்டிருக்கிறான். அதற்கு ஏதேனும் சான்றுகள் கிடைக்குமா என்று தேடுகிறான். தாங்கள் கானகத்தில் வேட்டையாடச் சென்று வழி தப்பிப் போய்த் திரும்பத் தாமதம் ஆனதற்குக்கூட ஏதோ உள்நோக்கம் கற்பிக்கப் பார்க்கிறான். தாங்கள் மாமன்னருக்கு விரோதமாக ஏதோ சதிச் செயலில் ஈடுபட்டிருப்பதாய் மாதண்ட நாயகன் நம்புகிறான்.''

''அவனுக்கு உன் பதில்?''

''அப்படிப்பட்ட எண்ணம் ஏதும் கனவில் கூடத் தங்களுக்குத் தோன்றியிராது என்பது தான்.''

''உனது பதிலில் பாராசிரயன் திருப்தி அடைந்தானா?''

''இல்லை பிரபோ! தங்களைக் கவனமாகக் கண்காணித்து வந்து சந்தேகப்படும்படியான அம்சம் ஏதேனும் தெரிய வந்தால் உடனே தன்னிடம் வந்து விவரம் கூற வேண்டும் என ஆக்ஞை பிறப்பித்தான்!''

''அந்த உத்தரவை நிறைவேற்றத்தான் இங்கு இப்போது திரை மறைவில் ஒளிந் திருந்தாயாக்கும்!''

''பிரபோ! அவ்வாறு தாங்கள் கருதுவ தாயின் அது எனது துர்ப்பாக்கியம் என் பதைத் தவிர வேறு என்ன நான் சொல்ல முடியும்?''

''ஆகவமல்லா! எழுந்திரு'' என்றான் விஜயாலயன் வாளைக் கழுத்திலிருந்து நீக்கிய வாறே. 'தப்பிவிட்டோம்' என்ற நம்பிக்கை யுடன் உடலை நிமிர்த்திய ஒற்றர் தலைவன் விஜயாலயனின் சீற்றம் தணியவில்லை என்று அவன் முகக் குறிப்பால் உணர்ந்து நடு நடுங் கினான்.

''ஆகவமல்லா! நன்றாகப் பேசுகிறாய்! சிக்கலிலிருந்து விடுபட ஓர் ஒற்றனுக்கு இந்த வாசாலகம் தேவைதான்'' என்றான் விஜ யாலயன். ''நீ பல்லவ மாளிகையில் பாரா சிரயனை ரகசியமாய்ச் சந்தித்துத் திரும்பியது என் நன்மைக்கே என்பதை நான் நம்பியிருப்பேன்; எப்போது தெரியுமா? நீ அன்றிரவே அல்லது மறுநாள் காலையிலேனும் என்னிடம் தானாக வந்து நடந்ததை நடந்தபடி கூறியிருந்தால்! ஆனால் இத்தனை காலம் நான் காத்திருந்தும் பயனில்லை. என் வாளின் கூர்மையை உன் கழுத்திலே நான் சோதித்துப் பார்க்கையில்தானே பேசு கிறாய்!''

கழுத்தைத் தடவிக் கொண்டே தலை குனிந்தான் ஆகவமல்லன். விரல்கள் ரத்தத் தில் நனைந்து பிசுபிசுத்தன. ''அடியேனிடம் தங்களுக்குள்ள நம்பிக்கை என்றுமே பழுது படாது என்ற எண்ணத்தில் அலட்சியமாய் இருந்துவிட்டேன் பிரபோ! கெஞ்சிக் கேட் டுக்கொள்கிறேன்! இந்தச் சிறு தவறு காரணமாய் என் நேர்மையையே தாங்கள் சந்தேகிக்கக் கூடாது!''

விஜயாலயன் இந்தச் சமாதானத்தை ஏற்கவில்லை. அந்தக் கணமே ஆகவமல்லன் சிறைக்கு அனுப்பப்பட்டான்.

அதன் பிறகு அன்று இரவு முழுவதும் அவர்கள் எதிர்காலம் பற்றியே பேசினார்கள். தனிமையும் நெருக்கமும் அகில் புகையின் மணமும் மலர் மஞ்சமும் சாளரத்தின் வழியே பொழிந்த நிலவொளியும் தவழ்ந்த தென்றலும் இருக்கையின் அருகே ஓர் அலங்கார முக்காலி மீது முன் யோசனை யுடன் வைக்கப்பட்டிருந்த பாலும் பழங் களும் பணியாரங்களும் எதுவுமே கவ னிக்கப்படாமலும் தொடப்படாமலும் போக மன்மதன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு வெட்கப்பட்டு வெளியேறினான்.

நீளிரவில் அவர்கள் தீட்டிய பல திட் டங்களில் ஒன்றுதான் இப்போது குவளையை யும் மற்ற நால்வரையுமே கூடல்மாநகரம் நோக்கி அழைத்துச் சென்றுகொண்டிருந் தது.

குவளையும் அவளைச் சேர்ந்தவர்களும் பழையாறையிலிருந்து கிளம்பிச் சென்றால் அதை யாருமே கவனிக்கவோ பொருட் படுத்தவோ போவதில்லை. ஆனால் சினன்— விஜயாலயனின் மெய்க் காவலன் — சோழ நாட்டின் மிகச் சிறந்த மல்லனும் மாற மரையனைக் களத்தில் கணத்தில் வென்று வாகை சூடியவன் — பின்னர் விஜயாலய னிடம் தோல்வியுற்று அவனுக்கே தன்னை அடிமையாக்கிக் கொண்டவன் — பழை யாறை நகர மக்களின் அன்புக்கும் அனு தாபத்துக்கும் பாத்திரமான ஊமையனைத் திடீரென்று காணோமென்றால் அது பாரா சிரயனின் கவனத்தை உடனடியாகக் கவ ராமல் போகாது. 'ஆகவ மல்லன் கொஞ்ச நாட்களாகக் — கண்ணிலேயே தென்பட- வில்லையே!' என்று மாதண்ட நாயகர் கேட் டால் கூட, 'அவனைத் துரோகி என்று சந் தேகித்துப் பாதாளச் சிறையில் தள்ளிவிட் டேன்' என்று மன்னர் குமாராங்குசன் துணிந்து மெய் பேசலாம். ஆனால் சினனைப் பற்றி வினவினால் என்ன கூற? உண்மையுரைக் கவா முடியும்? எனவே ஒரு சிறு நாடகமாட வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அவன் சோழ நாட்டுக்கு வந்து அறை கூவல் விடுத்து மல்லர்களுடன் பொருதியது போலவே வேறு பல அரசர்கள் முன்னிலை யிலும் அவ்வீர விளையாட்டில் ஈடுபட விரும்புவதாகவும் அப்படி ஒரு திக்விஜ யத்தை முடித்துக் கொண்டு சோணாடு திரும்புவானெனவும் அறிவிக்கப்பட்டது. அவன் பெறும் வெற்றிகள் அவனுடைய ஆண்டையான விஜயாலயனுக்கே உரியன வாகக் கருதப்படுமாதலால் அரச குமாரர் எதிர்பார்ப்புடன் பிரியா விடை கொடுத்து வாழ்த்தி அனுப்புவதாக ஒரு தோற்றம்

உருவாக்கப்பட்டது. ஒரு குதிரையையும் பொற்காசுகள் நிரம்பிய ஒரு முடிப்பையும் பரிசுகளாகப் பலர் முன்னிலையில் அளித்து அவனை ஆலிங்கனம் செய்து வழியனுப்பினான் விஜயாலயன்.

பழையாறைக் கோட்டைக்கு வெளியே முன்னேற்பாட்டின்படி குறிப்பிட்ட இடத்தில் அவன் குவளையையும் பிறரையும் சந்தித்தான். அனைவரும் சேர்ந்து இந்த ரகசியப் பயணத்தை மேற்கொண்டனர்.

இதையெல்லாம் எண்ணிப் பார்த்து வந்த குவளைக்கு, சிறைப்பட்ட ஆதவமல்லனுக்கு நிலவறையில் ஏற்பட்ட ஒரு பயங்கர விபத்து பற்றியும் நினைவு வந்தது. அந்த விபத்துக்குப் பின் நடந்த ரகசிய சிகிச்சைகளையும் அப்போது சோழ நாட்டின் தலைசிறந்த மருத்துவர்களுக்கு அருகே இருந்து தான் உதவி

---

## டிக்கெட்டை வாங்கிக் கிழித்தெறிவதா?

''ஷெய்குநாயகம் ஓர் ஆத்மிக நெறியின் ஆசான்; கல்வித்துறை வல்லுநர்.
ஷெய்கு நாயகம் அவர்களின் புதல்வர் அப்துல் உலமா நைக்கா ஆலிம சொல்கிறார்கள்:-
''நான் அப்பொழுது பத்து வயதுப் பாலகன், வாப்பா மதுரை சென்றார்கள். நானும் உடன் சென்றேன். இராமநாதபுரம் ரயில் நிலையத்திலே மதுரைக்கு இரண்டரை டிக்கெட்டு வாங்கி வரும்படி ஆள் அனுப்பினார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை, வாப்பா டிக்கெட்டுகளை உற்று நோக்கி விட்டு ஒரு முழு டிக்கெட்டைக் கிழித்துத் தூர வீசி எறிந்து விட்டார்கள்! அதிகப் படியாக ஒரு டிக்கெட் வாங்குவானேன்? பிறகு கிழிப்பானேன்?
''ஏன் டிக்கெட்டைக்கிழிக்கிறீர்கள்?'' துடிப்புடன் கேட்டேன். ''தம்பி! முன்பு ஒருசமயம் தவிர்க்க முடியாத சூழ்நிலையில் டிக்கெட் எடுக்காமல் மதுரை சென்றேன். அங்கு ஸ்டேஷனில் பல வாறு முயன்றும் சரிசெய்ய முடியாதுபோயிற்று. கம்பெனிக்கு ஏற்படுத்திய நஷ்டத்தை சரி செய்ய வேண்டாமா?'' என்றார் வாப்பா.

ஜே. எம். சாலி எழுதிய'' தமிழகத்து தர்காக்கள்'' புத்தகத்திலிருந்து
-சுகவர் குமார்
நூர் பதிப்பகம் 190, பீட்டர்ஸ் ரோடு
சென்னை-14.



யதையும் நினைவுகூர்ந்தாள். அனைவரும் அந்தரங்கம் காப்பதாகச் சபதமேற்றதையும் எண்ணிப் பார்த்தாள்.

நாட்கள் பல சென்றுவிட்டன என்றாலும் அந்தக் கோரமான சம்பவங்களை இப்போதும் ஞாபகம் வரும் போதெல்லாம் உடல் நடுக்கத்தை ஏற்படுத்தின.

அவை குறித்து அவள் மேலும் சிந்திப்பதற்கு முன், ''அதோ கோட்டை!'' என்றான் அவள் தம்பி ஆர்வத்துடன். உடனேயே ஒரு பரபரப்பு அனைவரையும் ஆட்கொள்ளக் குதிரைகளைத் தட்டிவிட்டார்கள். தொலைவில் தெரிந்த கோட்டை வெகு சீக்கிரத்திலேயே நெருங்கி வந்தது.

இப்போது கூடல்மாநகரின் வடக்குப்புற வாயிலும் அதன் இரு மருங்கிலும் நெடிதுயர்ந்த கோட்டைச் சுவரும் அவர்கள் எதிரே நின்று கழுத்து வலிக்க அண்ணாந்து பார்க்கச் செய்தது. ஒருவன் உச்சியில் குறுக்குவாட்டில் படுத்துப் புரளலாம் போல அத்தனை கனமான அந்தச் சுவரின் மேல் காவலர்கள் பலர் கவனமாகச் சிலையென நிற்பதையும் மாபெரும் முரசங்கள் கோட்டைக் கதவு அடைக்கும் நேரம் நெருங்குவதையோ அல்லது அது போன்ற வேறு செய்திகளையோ வித்தியாசமான ஒலிகளை எழுப்பி உணர்த்தக் காத்திருப்பதையும் அவர்கள் கண்டனர்.

அச்சம் என்பது அவர்கள் அகராதியிலேயே இடையாது என்றாலும் பாண்டியப் பேரரசின் தலைநகருக்குள் நுழையப் போகிறோம் என்ற மனக் கிளர்ச்சியும் என்ன நேருமோ என்ற தயக்கமும் கூடல்மாநகரின் செல்வச் செழிப்பை எண்ணும் போதே ஏற்படும் பிரமிப்பும் எல்லாம் ஒன்றோடொன்று போட்டியிட நிதானித்து முன்னேறினார்கள். ஆழமான அகழிக்குள் எட்டிப் பார்த்தபோது பாசி படர்ந்த நீரும் கரையோரமாகப் பாறை போல் பல முதலைகள் அசையாது கிடப்பதும் தெரிந்தன. அகழிப் பாலத்தின் மீதாக வண்டி வாகனங்களும் பாதசாரிகளும் வருவதும் போவதுமாகச் சந்தடி நிறையவே இருந்தது.

கூட்டத்தோடு கூட்டமாய்த் தாங்களும் உள்ளே நுழைந்து சென்று விடுவது கடினமாயிராது என்ற எண்ணத்துடன் கூட்டத்தினிடையே குதிரைமேல் ஆரோகணித்துச் செல்வது மிகவும் இடைஞ்சலாக இருக்கும் என்ற கருத்துடனும் இவரும் குதிரைகளை விட்டு இறங்கி அவற்றை நடத்திக் கொண்டு சென்றார்கள்.

ஆனால் மதுரை மாநகரின் கோட்டைக் காவலர்கள் அப்படியொன்றும் அசடர்கள் அல்ல என்பதும் அயலூர்க்காரரை உடனடியாக இனம் கண்டுகொள்ளக் கூடியவர்கள் தான் என்பதும் விரைவிலேயே தெரிந்தது.

''யார் அங்கே?'' என்ற அதிகாரத் தொனியைத் தொடர்ந்து இரண்டு மூன்று வீரர்கள் தங்கள் வேல் கம்புகளைக் குறுக்குவாட்டில் பிடித்து அவர்களை மடக்கி நிறுத்தினர்.

(தொடரும்)

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

...இதர, டிட்டர்ஜென்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

நீங்களே கண்டுகொள்வீர்கள்

இதை வெளுத்தது வேறுசில டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

# நினைவெல்லாம் நித்யா ௧

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:
















சந்தேகம் வர்ற மாதிரி ரொம்பவும் நெருங்கிடக் கூடாது. சமயம் கிடைச்சதும் முதல்லே அந்தக் கார் டயரைச் சுட்டு, வண்டி நின்னதும் அவங்க ரெண்டு பேரையும்...


மாலினி நீ என்ன சொல்றே?
சீதா சொன்னது கரெக்ட். அவகிட்டே கோவிச்சிக்கிட்டேன! ரமேஷ்! ரோஸி பியூட்டி பார்லர் தெரியுமில்லே?


தெரியும். அதுக்கும் இந்த விவகாரத்துக்கும் என்ன சம்பந்தம்?


இருக்கு. சொல்றேன். முதல்லே அங்கே போங்க...


சரியான சமயம்... தெருவிலே நடமாட்டம் இல்லே. வேகத்தை அதிகரிச்சு, அந்த வண்டியை நெருங்கி... அடுத்த நிமிடம்...
தொடரும்

# காதல் கடிதங்கள்

எஸ். ராமன்

வீட்டுவேலைகளை முடித்துவிட்டுச் சோபாவில் உட்கார்ந்து வாரப் பத்திரிகைகளைப் புரட்டினாள் நளினி. காகிதக் கூடை செய்வது பற்றி இரண்டு பக்கக் கட்டுரையை யாரோ 'புனை' பெயரில் எழுதியிருந்தார்கள். அவள் விழிகளை வேகமாக உருட்டினாள். ''பழைய காகிதத்தைக் கூழாக அரைத்து, கொஞ்சம் வெந்தயம் கலந்து வேண்டிய உருவங்களைச் செய்யலாம்'' என்று நடுவே செய்முறை சொல்லப்பட்டிருந்தது. அவள் புருவம் லேசாக உயர்ந்தது. இது ஒன்றும் அவளுக்குப்புதிதில்லை. கணேஷ், இதேபோல் எவ்வளவோ டிசைன்களில் 'காகிதக் கூடை' கலை உணர்வோடு செய்வதைப் பார்த்திருக்கிறாள். அவனுடைய அந்தக் 'கலை'த் திறமைதான் அவளை அவன்பால் இழுத்துக் காதல் கொள்ளச் செய்தது. 'விசிறி'யாக ஆரம்பித்தவள் எதிர் வீட்டிலிருந்த கணேஷுக்குக் காதலியானாள். அவனுடைய ஒரு காலில் இருந்த லேசான ஊனம் அவளைப் பாதிக்கவில்லை. இருவரும் மனத்தால் ஒன்றுபட்டதை உணர்ந்தனர். காதல் பூங்கா, சினிமா என்ற இடங்களில் அரும்பு விட்டு மலர்ந்து மணம் வீசவில்லையானாலும் கடிதங்கள் மூலம்





மனம் விட்டுப் பேசிக் கொண்டார்கள். அவள்தான் அவனுக்குப் பச்சையாகவும், கொச்சையாகவும் தன் காதலைப் பறைசாற்றி எழுதியிருப்பாள். லைலா - மஜ்னு ஷாஜஹான் - மும்தாஜ் கடிதங்களை அடிக்கடி ஆக்கிரமித்தார்கள். குப்பையை எதிர் வீட்டு வாயிலில் இருக்கும் தொட்டியில் கொட்டும்பொழுது தான் எழுதிய கடிதத்தையும் போட்டுவிடுவாள். அவள் நகர்ந்தவுடன் தொட்டியில் எதையோ தேடுவது போல் கடிதத்தை எடுத்துக் கொள்வான் கணேஷ். மாலையில் அவன் குப்பையைக் கொட்டுவான்.

அவளுக்கு அடங் என்று அவர்களுக்குள் முடிவானபொழுதுதான் பிரச்னை உருவெடுத்தது. அம்மாவிடம் லேசாகச் சொல்லிப் பார்த்தாள். அக்னித் துண்டத்தை மிதித்தவள்போல் மிரண்டாள் அம்மா. ''வேலை வெட்டி இல்லாமல் வெறுமனே வீட்டில் உட்கார்ந்துண்டு காகிதக் கூடை செய்யறவனையா கல்யாணம் செய்துக்கணும்கிறே... முடியாதுமா.''

''அவர் செய்யற ஒவ்வொரு டிசைன் கூடையையும் பார்த்தேன்னா அவருடைய திறமை உனக்குப் புரியும்மா.... ஆபீஸ்ல போய் வேலை பார்த்தாத்தான் வேலை செய்யறாங்கன்னு அர்த்தமா என்ன?'' என்று சமாதானம் சொன்னாள் நளினி.

''வேலை இல்லாதவனுக்குப் பெண்ணைக் கொடுக்க எனக்குத் துளிக்கூட இஷ்டமில்லை... அவனை மறந்துட்டு வேறே இடம் பார்க்கலாம்'' என்று அம்மா உறுதியாகச் சொல்லி விட்டாள். அப்பாவைக்கண்டால் அவளுக்குச் சிம்ம சொப்பனம்.

''அவருக்கு வேலை கிடைத்து விட்டால் சம்மதிப்பாயா?'' – விசும்பல்களுக்கிடையே நளினி கேட்டாள்.

''அத்தைக்கு மீசை முளைச்சா பார்த்துக்கலாம்... வருகிற தைக்குள்ள அவன் வேலையோட—வந்தான்னா தாலி கட்டட்டும்.... இல்லேன்னா நான் பார்க்கற மாப்பிள்ளைக்குக் கழுத்தை நீட்டு'' என்று கறாராக அம்மா சொல்லி விட்டாள்.

மீண்டும் கடிதங்கள் கை மாறின. கணேஷ் வேலை தேடப் புறப்பட்டவன் மார்கழிக் குளிரை எங்கே அனுபவித்தான் என்று யாருக்கும் தெரியாது. எதிர் வீட்டில் மாடி அறையில் தனியாக இருந்தவனைப் பற்றி யாரும் அக்கறையும் காட்டவில்லை.

அம்மா வேறு அரித்துக் கொண்டிருந்தாள். ஜாதகங்கள் பொருந்தின. நளினிக்கே நம்பிக்கை நசித்து என்ஜினியர் குமாருக்குக் கழுத்தை நீட்டினாள். மதுரையில் தனிக் குடித்தனம் ஆரம்பித்து ஒரு மாதம் ஆகி விட்டது. நளினி நளினி என்று சுற்றி வந்தான் குமார். வாரம் ஒரு சினிமா, நாடகம் என்று பொழுது இனிமையாகக் கழிந்து கொண்டிருந்தது.

டெலிபோன் ரீங்கரித்தது. ''ஹலோ... 25479தானே...''

''ஆமாம்.!'' — பதில் சொல்லும்போது கேட்ட குரலாக உணர்ந்தாள் நளினி. ''மிஸ்



நளினி.... ஸாரி மிஸஸ் நளினி இருக்காங்களா?'' — மறு முனை பேசியது.

''நளினிதான் பேசறேன்...நீங்கள் யார்?''

''அடடே.... ஆச்சரியமா இருக்கே... அதுக்குள்ளாவா மறந்துட்டே?... சாரி, மறந்துட்டீங்க.... என்னை வேலை தேட அனுப்பிச்சுட்டு வேறு ஒருத்தனுக்கு மனைவியாயிட்டு என்னை ஏமாற்றி விட்டாயே நளினி. இது நியாயமா?'' — ஆண் குரல் வினவியது.

''ஓ... மிஸ்டர் கணேஷ்... நீங்களா! சென்னையில் இருந்தவர் இங்கே எப்படி மதுரைக்கு?....''

''ஆச்சரியப்படாதே. உன்னைக் கடைசி முறையா பார்க்கணும்னு வந்திருக்கேன். நீதான் என் வாழ்க்கைன்னு நீ எழுதிய ஆசை வார்த்தைகளை வைத்துக் கோட்டை கட்டியது என் தப்புத்தான். அதுக்காக

என்னை வேலையோடு வான்னு ஒரு சாக்கைச் சொல்லி அனுப்பிவிட்டு மிஸஸ் குமார் ஆயிட்டீங்களே... நேரிடையா 'உன்னைப் பிடிக்கலேடா நொண்டிப் பயலே'ன்னு சொல்லியிருந்தா சந்தோஷப் பட்டிருப்பேன்!''

''நோ... மிஸ்டர் கணேஷ்... நீங்களாக எதையும் கற்பனை செய்ய வேண்டாம். நடந்தது உங்களுக்குத் தெரிய நியாயமில்லை. ஒரு காலத்தில் நான் உங்கள் காதலி. ஆனால் இப்பொழுது கல்யாணமானவள். என்னைச் சொல்லம்பினால் வதைக்காதீர்கள்.''

கணேஷ் விரக்தியாகச் சிரித்தான். ''நானா வதைக்கிறேன்? நீ எழுதிய ஒவ்வொருகடிதத்தைப் பார்க்கும்பொழுதும் நான் புழுவாகத் துடித்து ஏங்குவது அந்தக் காகிதங்களுக்குத்தான் தெரியும்... உனக்குத் தெரிய நியாயமில்லை.''

''இப்பொழுது என்னை என்ன பண்ணச் சொல்கிறீர்கள்?'' — நளினி பயம் கலந்த வார்த்தைகளில் பேசினாள்.

''ஒன்றும் செய்ய வேண்டாம். நீ எழுதிய கடிதங்கள் என்னிடம் இருந்தால் அது எனக்கு ஒரு முள் படுக்கை. அவைகளை உன்னிடமே சமர்ப்பித்துவிட விரும்புகிறேன். உன் திருமணப் பரிசாக....''

''ஐயோ வேண்டாம் கணேஷ்... என் வாழ்க்கையை நரகமாக்கி விடாதீர்கள்... அவருக்குத் தெரிந்தால் என் கதி?''

''உன் கதியைப் பற்றியே கவலைப்படுகிறாயே... என்னுடைய தனிமையான ஏமாற்றத்தை நினைத்துப் பார்த்தாயா... தினம் தினம் நான் பார்த்து ஏங்கும் இனிய வாசகங்களைக் கொண்ட அந்த நூற்றுக் கணக்கான கடிதங்களை நீயே வைத்துக்கொள்ள வேண்டும்... அதைப் பார்க்கும்பொழுதெல்லாம் உனக்கு என் நினைவு வரவேண்டும்.... உன் கணவன் வீட்டில் இருக்கும் சமயம் பார்த்துத்தான் உனக்கு அந்தப் பரிசைத் தரப்போகிறேன்...'' — கணேஷ் விரக்திச் சிரிப்பை மீண்டும் உதிர்த்தான்.

**''அவர் கரங்கள் கறைபடியாத கரங்கள்''**
**''அப்படியா...?''**
**''ஆமாம் — லஞ்சம் வாங்கும்போது 'க்ளவுஸ்' போட்டுக்கொண்டுதான் வாங்குவார்''**
**-டி. எஸ். பத்மநாபன்**



நளினிக்கு வியர்த்துக் கொட்டி ரவிக்கை நனைந்தது. மறு பக்கத்தில் போன் கனெக்ஷன் துண்டிக்கப்பட்டது.

இரவு குமார் அடிக்கடி அவள் முக வாட்டத்துக்குக் காரணம் கேட்டான். உடம்பு சரியில்லை என்று சாக்குச் சொன்னாள். அவள் மார்புத் துடிப்பு அடிக்கடி எக்ஸ்பிரஸ் வேகத்தை எட்டிப் பிடித்தது. எச்சில் முழுங்கக் கஷ்டப்பட்டாள். நடக்கப் போகும் நிகழ்ச்சிகள் அவள் மனத் திரையில் ஓடி மறைந்தன. கடிதங்களைப் பார்க்கப் போகும் குமார் மிருகமாக மாறித் தன்னை வதைக்கப்போகும் நிகழ்ச்சிகள் நிழற்படமாக அவள் முன் ஓடின. தன் மண வாழ்வு இவ்வளவு விரைவில் முற்றுப் பெறப் போகிறது என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை.

**ம**றுநாள் காலை ஞாயிற்றுக் கிழமை. காலை மணி பத்தடித்தது. கதவு தட்டப் பட்டது. அவள் மனம் வேகமாக அடித்துக் கொண்டது. எதிர் பார்த்தது நடக்கப் போவதை உணர்ந்தாள். ஓர் அட்டைப் பெட்டியைச் சுமந்து நின்றுகொண்டிருந்தான் கணேஷ். யார் இவர் என்பது போல் பார்த்தான் குமார்.

''இவர்தாங்க எங்க வீட்டுக்குப் பக்கத்திலே இருந்தார். குடும்பநண்பர்....'' வார்த்தைகள் வெளிவராமல் தடுமாறினாள் நளினி.

''உட்காருங்க...'' குமார் உபசரித்தான்.

காப்பி வந்தது. எங்கேயோ வடக்கே வேலைக்குப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தான் கணேஷ். அட்டைப் பெட்டி மீதே கண்ணைச் செலுத்தின நளினிக்குப்பாதி உயிர் போயிற்று. அதனுள்தான் அந்தக் கடிதங்களை வைத்திருக்கிறானோ... இரக்கமில்லையோ இவனுக்கு... சீ....குமாரிடம் கொடுக்காமல் இருக்கணுமே ஆண்டவா...'' இதைக் கலியாணப் பரிசாக வைத்துக் கொள்ளுங்கள்...'' கணேஷ் குமாரிடம் கொடுத்து விட்டுக் கிளம்பி விட்டான். இறுக்கமாகக் கயிறு போட்டுக் கட்டியிருந்ததைப் பிரிக்க வேண்டாம் என்றாள் நளினி. ஆர்வத்தில் குமார் பிரித்தான். ''என்ன இது! இரண்டு கூடைகள், டிசைன் போட்டு... உள்ளே எடுத்து வை... அரிசி பருப்பு எடுத்துவைக்க உதவும். எனக்குப் பிடித்திருக்கிறது... யாருக்கும்கொடுத்துவிடாதே...'' நளினியின் காதில் வார்த்தைகள் தேனாகப் பாய்ந்தன. இருடனுக்குத் தேன் கொட்டியது போல் இருந்தவளுக்குப் பயம் கொஞ்சம் தெளிந்தது. நல்ல வேளை. அந்தக் கடிதங்கள் இல்லை! என்று பெருமூச்சு விட்டாள். மீண்டும் வருவானோ என்று சந்தேகித்தாள். அவன் வரவில்லை. மறுநாள் போனில் பேசினான். ''நீ எழுதிய எல்லாக் கடிதங்களையும் ஒன்று விடாமல் கூழாக்கி உனக்குப் பிடித்த கூடைகள் செய்து சொன்னபடியே உன் கணவனிடம் தந்து விட்டேன். அந்தக் கூடைகளைப் பார்க்கும் பொழுதெல்லாம் என் நினைவு உனக்கு வரட்டும்... இனி உன் பாதையில் நான் வரமாட்டேன்,''



# ஒரு கதை: பல பார்வை

**தீரன்**

## இலக்கியத்தில் இறையுணர்வு

தத்துவங்களை விளக்குவன புராணக் கதைகள். அதனால் ஒரு புராணக் கதைக்குப் பலர் பல தத்துவங்களைக் கூறி விளக்கம் தருவது இயற்கையே.

பெரும்பாலும் 'தமிழ் இலக்கியங்கள் எல்லாவற்றிலும்' கையாளப்பட்டுள்ள ஒரு புராணக் கதை அகலிகை கதை. திருவள்ளுவர் முதல் பலராலும் கையாளப்பட்டது.

அகலிகை என்ற சொல்லுக்குப்பொருள் 'மிக அழகானவள்' என்பது. வடமொழியில் ஹல்யா என்றால் அழகற்றவள் என்று பொருள். அஹல்யா என்றால் அழகற்றவள் அற்றவள் என்பது. அதாவது மிக அழகானவள்.

கௌதமன் என்ற முனிவனுக்கு மனைவி அகலிகை. இந்திரன் அவள் அழகில் மயங்கி, அவளை அடைய விரும்பி, நள்ளிரவிலேயே பொழுது விடிந்தது போன்ற சில குறிப்புக்களைக்காட்டினான். கௌதமன் காலைக் கடன்களை முடிக்கப் புறப்பட்டுச் சென்றான். இந்திரன் கௌதமன் வடிவத்தை மேற்கொண்டு அகலிகையுடன் கூடினான். பொழுது விடியாமை உணர்ந்து

திரும்பிய கௌதமன் அகலிகை கல்லாக வேண்டும் என்றும், இந்திரன் ஆயிரம் கண் உடையவன் ஆக வேண்டும் என்றும் சபித்தான்.

அகலிகை கதையைக் கையாண்டவர்கள் எல்லாம் அகலிகை தெரிந்தே தவறு செய்தாள் என்றுதான் குறிப்பிட்டார்கள்.— கம்பனைத் தவிர.

இந்த அகலிகைக் கதையை ஒவ்வொரு நூலாசிரியரும் ஏதேனும் ஒரு வாழ்க்கை உண்மையைத் தெரிவிக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

திருவள்ளுவர் தமக்கே உரிய முறையில் இக்கதையை நினைவு படுத்துகிறார். பொதுவாக அகலிகை கதையைக் கேட்போர் அதன் சாரமாகத் தெரிவிக்கும் கருத்து ''இந்திரன் புலன் அடக்கம் இல்லாமல் சிறுமைப்பட்டான்'' என்பதே! ஆனால் இக்கதை அந்தக் கருத்தை மட்டும்தான் தெரிவிக்கிறதா? இந்திரனுக்கும் அகலிகைக்கும் கௌதமன் இட்ட சாபங்கள் உடனே நிறைவேறியன அல்லவா? இத்தகைய ஆற்றல் — சாபம் கொடுக்கும் ஆற்றல் கௌதமனுக்கு எப்படி வந்தது? அவன் மேற்கொண்ட புலன் அடக்கத்தால்தானே! அதனால் அகலிகை கதை இந்திரன் புலனடக்கம் இல்லாது பெற்ற சிறுமைக்கு மட்டுமல்ல; கௌதமன் புலனடக்கத்தால் பெற்ற பெருமைக்கும் சான்றாகும் என்றார் திருவள்ளுவர்.

''ஐந்தவித்தான் ஆற்றல், அகல்விசும் புளார்
கோமான்
இந்திரனே சாலும் கரி.''

எல்லாம் வல்ல முருகப் பெருமான் கருணையை நமக்குக் காட்டிய கந்தபுராண ஆசிரியர் கச்சியப்ப சிவாச்சாரியார் இக்கதையை எப்படிப் பயன்படுத்துகிறார் என அறிவது மிகச் சுவையானது.

மிகச் சாதாரணமான போர்க்கள வருணனை ஒன்றில் அவர் இக்கதையைப் பயன்படுத்துவது மிகச் சிறப்பானது.

சிங்கமுகன் முருகனுடன் போர் செய்த யுத்தகளத்தில் தன் வாயை அகலமாகப் பிளந்து கொண்டு நின்றான். போர்க் களத்தில் உள்ள பேய்கள் முழு அளவில் அவனுடைய வாய் வழியாக உள்ளே நுழைந்தன. சிறிது நேரத்தில் சிங்க முகன் திறந்த வாயை மூடிக் கொண்டான். உள்ளே முழுமையாகச் சென்ற பேய்கள் பின்னப் பட்டுக் காது வழியாக வெளி வந்தன. இந்த வருணனையில் பேய்கள் சிங்க முகன் வாய்க்குள் நுழையும்போது முழுமையாகவும், முறையான வாசலாக வாய் வழியாகவும்சென்றன என்பதும், அவன் வாயை மூடிய பின்னர் அப்பேய்கள் பின்னப்பட்டும் முறையற்ற வாசலாகிய காது வழியாக வெளிப்பட்டன என்பனவுமே முக்கியமான குறிப்புக்கள்.

இந்திரன் அகலிகையை விரும்பியவுடனேயே அவன் காமப் பேய்தானே! அவன் அகலிகையை விரும்பி அவள் இருப்பிடம் செல்லும்போது முழு வடிவத்துடனும், முறையான தலைவாசல் வழியாகவும் நுழைந்தான். ஆனால் கௌதமன் சாபம் பெற்ற பின்னர், பின்னப்பட்ட மேனியுடனும் முறையற்ற வாசலாகிய கொல்லைப்புறம் வழியாகவும் வெளிப்பட்டான். போர்க்களத்துப் பேய்களுக்கு இந்திரனாகிய காமப் பேயை ஒப்பிட்டு அகலிகை கதையைக் கச்சியப்பர் கையாண்ட திறம் மிகச் சிறப்பானது.

''மன்புரி அவுணர் தோன்றல்
வாய்பொதி சென்னி புக்குத்
துன்புறும் அலகைத் துண்டம்
செவிநெறி துருவிப்போன
முன்புறும் முனிவன் இல்லை
முயங்குவான் உறையுள் புக்கோன்
இன்பொடு வன்மை சிந்தி
நாழையாப் இரிந்தவா போல்.''

## ஆன்றோர் வாக்கு



எல்லோருக்கும் ருசி ஒன்றாக இருப்பதில்லை. எல்லாருக்கும் ருசி ஒன்றுதான் என்றால் ஒரே ஆகாரம், எல்லாருக்கும் ஒரே உடை, எல்லாருக்கும் அதே மாதிரி ஒரே கடவுள்தான் எல்லாருக்கும் என்று வைத்து விடலாம். அது இல்லாததனாலேதான் அநேக விதமாக உணவுப் பதார்த்தங்கள் உடைகள், ஆபரணங்கள், அநேக விதங்களில் ஸ்வாமி இவற்றை வைத்துக் கொண்டிருக்கிறோம். அநேக விதமான மதாந்தரங்கள் உலகில் உண்டாகியிருக்கின்றன.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்

பெண்களுக்கு விடுதலை கொடுத்ததனால் ஹிந்து சமூகம் குழம்பிப் போய்விடும் என்று சொல்லுவோர், பிறர் தமது கண் முன் சுயேச்சையுடன் வாழ்வதைத் தாம் பார்க்கக் கூடாதென்று அசூயையால் சொல்லுகிறார்களே யொழிய வேறொன்றுமில்லை.

—பாரதியார்

புகழுரையொன்றே உண்மையான அன்பைக் காட்டிவிடாது. சேவையின் மூலமே அதை நாம் காட்டலாம். ஆத்ம சுத்தியே உண்மையான தொண்டு செய்வதற்கு முதற் படியாகும்; இன்றியமையாத நிபந்தனையுமாகும்.

—மகாத்மா காந்தி

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

**நைஸில்**
**உபயோகிப்பீர்-**
**மிகத்துரித நிவாரணம்**
**அளிக்கும்**
**வியர்க்குரு**
**பவுடர்.**

2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

**வாங்குவீர் நைஸில்.**
**விரட்டுவீர்**
**வியர்க்குருவை.**
**பால்கள் பவுடரை**
**விட**
**குறைந்த விலையில்!**

nycil

மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை
யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை
உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்
படுத்தும் கிருமி
களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத
மளிக்கிறது.

GN-79-PR-TM




# மின்சா

"சார்... கொஞ்சம் நகர்ந்துக்கறீங்களா?"

"ஏற்கனவே மூணு பேர் உட்கார்ந்துண்டு இருக்கிறோம்... இன்னும் நகர்ந்தால் அவர் ஜன்னலுக்கு வெளியேதான் போகணும்."

"எங்கேய்யா போறே? காலெ மெதிச்சுண்டு... இதிலே தலையிலே கூடை வேறே."

"சாம்பி வவுத்துப் பொழைப்புங்க. கொத்தவால்சாவடியிலேர்ந்து சரக்கு புடிச்சியாரேன்."

"ஷார்... என்ன நியூஷ்?"

"வெத்தலெ பாக்கைப் போட்டுக்கிட்டுப் பேசாதேன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன் ராமசாமி."

"தெரியலே."

"வழியாதே... ஸார் ஒரு ஷீட் கொடுக்கிறீங்களா?"

"இப்பத்தான் வாங்கினேன். பேப்பரைப் பிரிக்கலே. கடன் கேக்கறீங்களே."

"அம்மா கண்ணு.... அடி கயிதே எங்கே இறே... டேசன் வர்றது... இப்படிக் கதவாண்டை வா."

"ஐ திங் அட் திஸ் ரேட் பி. எம். வில் டேக் டிராஸ்டிக் ஸ்டெப்ஸ்."

"ஷி வில் ஹேவ் டு..."

"பழனிச் சண்முகா... வேலுண்டேய்... பார்க்கவேணும் பரகதி கொடுப்பாருண்டே... பழனிச் சண்முகாவேலுண்டேய் ....தண்ணீர் பன்னீராகும். சமைச்ச மீனுக்குயிருண்டாகும்.... பழனிச் சண்முகா அம்மா... அய்யா.... கண் இல்லாதவன் அய்யா...."

"போப்பா...மேலே போ... மாசக் கடைசியிலே தானமாவது தருமமாவது."

"என்ன தலைவரே... காலேஜ் கட் போல இருக்கு....."

"பின்னே இன்னாடா... லாஜிக் ரொம்ப அறுவைடா... அப்புறம் அந்த ஜீன்ஸ் சிங்காரியும் கிளாஸுக்கு வரலே... போரடிக்காம என்னடா செய்யும்?"

"சரி....சரி.... ஒரு தம் இருந்தால் கொடு."

"சுண்டல்...சுண்டல்...சூடான சுண்டல் தேங்கா மாங்கா பட்டாணி சுண்டேல்!"

"ஏம்பா சுண்டல்... நீ எங்கே யிருந்து வர்றே?"

"ஏங்க... நான் சிங்கப்பெருமாள் கோவி லிருந்து ஆறு கல்லு தூரத்திலே இருக்கிற கிராமத்திலேர்ந்து வர்றேன்."

## ...ாத்

# ...ரயில்

...'விடிகாலே புறப்பட்டிருப்பே. அப்போ ...ஞ்ச சுண்டல் இப்ப மணி நாலாவுது... ...னுமா, சூடா இருக்கும்?''

'அப்படிச் சொல்லி விக்கிறது பழக்க ...க.''

'கோபாலா, இந்தச் சுண்டல்காரரு ...ளக்கே ஐஸ்கிரீம் வித்தாலும் சூடான ...கிரீம் விப்பார்... பழக்கம் பாரு!''

'யாருப்பா,தம்பி... வெளியிலே எட்டிப் ...க்காதே. கம்பத்திலே அடிபட்டுடப் ...ாவுது.''

'பாத்துத்தான் நிக்கறேன். நீங்க கவ ...படாதீங்க.''

'காலம் கெட்டுப் போச்சு. நல்லது ...ான்னல் சுர்ருன்னு வருது. போன ...ரம்தான் கிண்டியிலே ஒரு ஆளுக்கு ...பட்டுது.....''

'என்ன கண்ணப்பா.... இந்த வாரம் ...ான ஃபேவரிட்... சில்வர் க்வீன்லே கட்ட... ...மா?''

'அட போப்பா... போன வாரம் ஒரு ...லக்'லே நம்ப பணம் போயிட்டுது.''

''லெக்லே போன, காலே வாரிட்டு ...சுன்னு சொல்லு.... நம்ப ராமன் பெங் ...ர்லே போய் பீராய்ஞ்சுண்டு வந்துட் ...னும்.''

''இல்லே மாமி... மாம்பலத்திலே பாத் ...ச் சீட்டு கட்டியிருந்தேன். இவ்ளூண்டு ...லாவைக் கொடுத்து நூறு ரூபாய்ங்கறான்! ...ண்டா இப்படிக் கொள்ளை அடிக்கறீங் ...ன்னு சொல்லிட்டு எடுத்துண்டு வந்தேன். ...ற வழி?''

'நூறு ரூபாயா? அநியாயம். போன ...ரம் பம்பாயிலேருந்து எங்க நாத்தனர் ...ாண்ணு வந்தா. அவள் இதைவிட ஒரு ...து சின்னதா வாங்கிண்டு வந்தா. நாற் ...தேழு ரூபாயாம்!''

''....சரின்னு சொல்லி லாரியைப் புக் ...ன்னேன். இல்லாட்டி. சரக்கு பாழாய்ப் ...ாய்டுமே.... அண்ணே புகையிலே இருந் ...க் கொடு.''

'மேரெ அங்க்னே மே, நாமு படா ...ழ....''

'சரிதான். விவித பாரதி ஆரம்பிச் ...ச்சு. இந்த ரயில்லேயும் பாப் மியூசிக் ...டிக்கிட்டுப் பிச்சை எடுக்க வந்தாலும் ...வாங்க.''









நித்யா மாடி ஜன்னல் வழியாகப் பார்த்தாள்.

பக்கத்தில் இருந்த சிறுவர் பூங்காவில் அநேக சிறுவர் சிறுமியர் விளையாடிக்கொண்டிருந்தனர்.

பேதங்கள் அறியாத பருவம்.

அந்தக் கால நினைவுகள் எல்லாம் எழுகிறது.

அப்போதெல்லாம் இங்கு பூங்கா இல்லை. இது சில வருஷங்களுக்கு முன் ஏற்பட்டது தான். அதற்கு முன் இந்த இடம் வெறும் திடலாகத்தான் இருந்தது. வீட்டுத் திண்ணைகளில்தான் விளையாட்டெல்லாம்.

அப்போதெல்லாம்...

நொண்டிக்கோடு, பல்லாங்குழி, அப்பா அம்மா அண்ணன்-தங்கை டாக்டர் ஜோஸ்யர் விளையாட்டுக்கள்தான்.

கண்ணன் ஞாபகம் வருகிறது.

'இந்தக் கரி மூஞ்சியை யார் கட்டிப்பா?'

நித்யாவின் முகத்தில் வேதனை மலிந்த புன்னகை.

கண்ணன்!

நிறத்தில் அசல் கண்ணனாக விளங்கியவன், தோற்றத்தில்....

பக்கத்துவீட்டில் குடியிருந்த போஸ்ட்மாஸ்டரின் பையன். அண்ணன் தங்கை யாரும் அற்ற தனி மரம்.

நித்யாவைப் போல.

அவளிடம் அவன் உயிராக இருப்பான். நித்யா, நித்யா என்று சுற்றிச் சுற்றி வருவான். ஏனோ அவளுக்கு மட்டும் அவனை அவ்வளவாகப் பிடிப்பதில்லை. என்றாலும் விளையாடுவதற்குத் துணைகள் வேண்டுமே.

அவனைத் தவிர ஆபீசர் வீட்டு அருண், எதிர் வீட்டுச் சந்திரன் இவர்கள்தான் அவள் விளையாட்டுத் தோழர்கள்.

அப்போதெல்லாம் அவளுக்கு எட்டு வயது இருக்குமா? இருக்கும்.

'நான்தான் டாக்டராம் நீ பேஷண்டாம்' கண்ணன் விளையாட்டைத்துவங்கும்போதே, 'டாக்டராம் டாக்டர், மூஞ்சியைப் பாரு!' நித்யா கத்தரித்து விடுவாள்.

'டேய், அருண், நீதான் டாக்டர். நான் நர்ஸ். சந்திரன் ஒரு பணக்கார பேஷண்ட். கண்ணன் டாக்டர் வீட்டுத் தோட்டக்காரன்'...' நித்யா தரம் பிரிக்கும்போது—

கண்ணனின் கண்கள் பல சமயங்களில் கலங்கியதுண்டு.

இப்போது நினைத்தால், ஏதோ ஒரு பரிதாபம் அவன் மேல் எழுவதுபோல் கூட இருக்கிறது. ஆனால் மற்றவரைப் பார்த்துப் பரிதாபப்படக் கூடிய நிலையிலா இன்று அவள் இருக்கிறாள்?

அந்த நாளில் எப்போதாவது கற்பக மாமி விளையாட்டாக, 'ஏண்டி பொண்ணே! நீ எங்க கண்ணனையே கட்டிக்கோயேன்' — கேட்கும்போது—

முகத்தில் அடித்தது போல் நித்யாவிடமிருந்து வெளிப்படும் பதில்தான்—

'இந்தக் கரி மூஞ்சியை யார் கட்டிப்பா?'

லேசாக இருள் கவிந்து விளையாட்டுப் பூங்காவின் ஓரமிருந்த விளக்குகள் பிரகாசிக்கத் தொடங்கி விட்டன.

நித்யாவிடமிருந்து நெடு மூச்சு ஒன்று வெளிப்பட்டது.

இருபதாம் தேதி இன்ஸ்பெக்ஷன். திருத்தி முடிக்க வேண்டிய இங்கிலீஷ் வியாச நோட்டுக்கள் ஏகமாகக் காத்திருந்தன. எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். மனம் ஏனோ அதில் ஈடுபட மறுத்தது.

ஸ்டோர் ரூமிலிருந்து அம்மா சமையலுக்கான சாமான்கள் சிலவற்றை எடுத்துக்கொண்டு அடுக்களைக்குள் நுழைவது தெரிந்தது.

''இப்போ என்னம்மா செய்யப்போறே?''

''ஏதானும் ஒரு ரசம் வச்சு....''

''ஒண்ணும் வேண்டாம். ஏன் இந்த கடம்போட.... பாட்டிலில் பருப்புப் பொடி இருக்கு. ரெண்டு அப்பளம் சுட்டுக்கிட்டாப் போதும்.''

பார்வதி எடுத்தவற்றை வைத்து விட்டுக் கதவைச் சாத்திய பின் அந்தச் சிறிய அறையின் ஒரு மூலையில் வந்து சுருட்டிக்கொண்டு படுத்தாள்.

பாவம் அம்மா, ரொம்பத்தான் கனங்கிப் போனாள். வயோதிகம், கவலை, வியாதி மூன்றில் ஏதேனும் ஒன்றே போதும். அவளிடம் தாராளமாக மூன்றுமே வியாபித்து விட்டன. அப்பா இருந்தவரை தைரியமாக இருந்தாள். அவர் திடீரென்று போனபின் பெண்ணின் கவலைதான் அவளுக்குப் பெரிதாகப் போய்விட்டது.

'நீங்க ரொம்ப அழகா இருக்கீங்க டீச்சர்!'

'ஆமாம் டீச்சர். எங்கம்மா கூட உங்களை அன்னிக்குக் கோயில்லே பார்த்துட்டு உங்க டீச்சர் இவ்வளவு அழகான்னு ஆச்சரியப்பட்டா.'

ஆறும் வகுப்பு மாணவிகள் சிலர் அவளிடம் இப்படிக் கூறும்போது மனத்தின் ஒரு மூலையில் மகிழ்ச்சி பரவி நிற்பது உண்மைதான். ஆனால் இந்த நாளில் ஒரு பெண்ணின் கல்யாணத்துக்கு இந்த ஒரு தகுதி மட்டுமா போதும்?

மறு நாள்—

ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து அடுக்களை வேலைகளைத் தொடங்கிவிடும் அம்மா, இன்று அயர்ந்து படுத்திருந்தாள். ஞாயிற்றுக் கிழமை விடுமுறை நாள்தானே என்று நினைத்துச் சோம்பியிருக்கலாம்.

''ரொம்ப நேரம் ஆயிட்டுதா நித்யா?''



''இல்லே, மணி ஆறு ஐம்பது. இருந்தா என்ன, இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை தானே?''

''ஓ'' — பார்வதி எழுந்து பாத்ரூம் போனாள்.

வாசு, சங்கர், கணேஷ் மூவரும் வந்து விட்டார்கள். — டியூஷன் பையன்கள்.

அவர்களுக்கான வேலைகளைக் கொடுத்து எழுதச் சொன்னாள்.

மீண்டும் அடுக்களை.

காப்பி ஆறிப்போகிறது. பாத்ரூம் போன அம்மாவை இன்னும் காணோம். எண்ணம் தோன்றியபோதே 'தடால்' என்று ஒரு சப்தம்.

அவசரமாக பாத்ரூம் நோக்கி விரைந்தவள் அங்கு பார்வதி அலங்கோலமாக விழுந்து கிடப்பதைக் கண்டு பதறிப் போனாள்.

பார்வதி அரைக் கண்ணால் பார்த்தாள். பேச்சில்லே, அசைவில்லே.

''அடே சங்கர், ஓடிப்போய்ப் பக்கத்துத் தெரு கற்பகம் மாமியைக் கொஞ்சம் கூட்டிட்டு வாடா. பார்த்துக்கச் சொல்லிட்டு யாரையாவது டாக்டரைப் போய் அழைச்சிட்டு வரணும்.''

சங்கரும் கணேஷும் சேர்ந்தே ஓடினார்கள்.

அடுத்த சில விநாடிகளில் சங்கரும் கணேஷும் பின் தொடர அங்கு வந்தவன்—

'ஓ' — நித்யா நிச்சயமாக அவனைக் கனவிலும் எதிர்பார்த்திருக்க முடியாது. பதினைந்து வருஷங்கள் என்றாலும் இதோ அவனை அவளுக்கு நன்றாக அடையாளம் தெரிகிறதே.

ஆனால் அவனுக்கு....?

வந்தவன் சங்கர்வழிகாட்ட நேராகப் பார்வதி படுத்திருந்த இடத்துக்குப் போனான்.

அவளை அவனுக்கு உடனே புரிந்திருக்க வேண்டும். அதனால்தான் சட்டென்று நித்யா நின்றிருந்த பக்கம் திரும்பினான்.

''நீ..... நீ.... நித்யா தானே?''

அவள் தடுமாறிப் போனாள். ''ஆமாம்... கண்... டாக்டர்!'' என்றாள்.

'நோ, நான் கண் டாக்டர் இல்லே''— வெள்ளைப் பற்கள் பளிரிடக் கண்ணன் சிரித்தான்.

நித்யாவிடம் பேசியபடி, அவன் பார்வதியையும் தீவிரமாகப் பரிசோதித்தான்.

சங்கர் கையில் தூக்கி வந்த பெட்டியை வாங்கிப் பார்வதிக்கு இரண்டு வகை ஊசி மருந்தைக் கலந்து செலுத்தினான். மருந்து மாத்திரைகளைப் பரபரவென்று எழுதினான்.

''இதையெல்லாம் இப்போ உடனடியா வாங்கிக் கொடுக்கணும். நான் சாயங்காலம் ஐந்து மணிக்கு மறுபடியும் வரேன். அதுக்குள்ளே ஏதாவது அவசரம்னா ஆர். பி. காலனியில் டாக்டர் கண்ணன்னு கேட்கச் சொல்லு வீட்டைக் காட்டுவாங்க'' —புறப்பட்டுவிட்டான்.

''டேய், சங்கர், இவரை எங்கிருந்தடா கூட்டி வந்தே?'' நித்யா திகைப்பிலிருந்து இன்னமும் மீளவில்லே.

''கோடி வீட்டு வக்கீல் மாமாவுக்கு உடம்பு சரியில்லேன்னு காலேயிலே இவரை அழைச்சுண்டு வந்தாங்களாம். பார்த்துட்டுக் காரில் ஏறப் போனார். விஷயத்தைச் சொல்லிக் கூப்பிட்டேன். உடனே வந்துட்டார்.''

அவளுக்கு எல்லாமே கதைகளில் வரும் நிகழ்ச்சிகள் போல் தோன்றின. அந்தத் திகைப்பிலும் பிரமிப்பிலும் அவனுக்கு அவள் ஃபீஸ்கூட ஏதும் தரவில்லையே... கொடுக்க வேண்டும் என்று தோன்றக்கூட இல்லையே. அவன் ஏதேனும் தவறாக நினைத்திருப்பானோ?



அன்று பிற்பகல் கற்பகம் மாமி அங்கு வந்தபோது பார்வதி நன்றாகவே எழுந்து உட்கார்ந்திருந்தாள்.

''அடி பார்வதி, என்னடி செய்தது? கண்ணன் வந்தவன் சொன்னான். நீங்க நம்ம தெருவில் இருந்த வீட்டை வித்துட்டு இங்கே வந்ததெல்லாம் அவனுக்குத் தெரியாது. அவன் இப்போ டாக்டருக்குப் படிச்சு முதலில் செங்கல்பட்டில் அஞ்சாறு வருஷம் வேலை பார்த்துட்டு இப்போ நம்ம ஊருக்கு வந்திருக்கான். அதற்குள் ஊரிலே அவனுக்கு எவ்வளவு நல்ல பேர்ங்கறே! காலமில்லை, நேரமில்லை. எந்தச் சமயத்தில் யார் கூப்பிட்டாலும் எழுந்து ஓடறான். பதினைஞ்சு வருஷங்களுக்கு முன்னே ஊரை விட்டுப் போன குடும்பம். அப்பா அம்மா எல்லாம் போயாச்சு. இவன் மட்டும்தான் மிச்சம். எப்படியோ இருந்ததையெல்லாம் வித்து நல்ல முறையில் படிச்சு உருவாயிட்டான். இப்போ ஆர். பி. காலனியிலே இருக்கான். அவனுக்கு நான்தான் சமைச்சுப் போட்டுட்டு இருக்கேன். இன்னமும் தனி மரம்தான்.''

எம்.ஜி.ஆர் ரசிகர் மன்றம்; சிவாஜி மன்றம் எல்லாம் தெரியும் ஒரு கற்பனை கதாபாத்திரத்துக்கு ஒரு சங்கம், சென்னையில்! மயிலை கிழக்கு மாட வீதி நெ. 32ல் வசிக்கும் டாக்டர் ஜி. கிருஷ்ணமூர்த்தி 'ஷேர்லக் ஹோம்ஸ் கிளப்' தொடங்கி இருக்கிறார். ஒரு கற்பனை பாத்திரத்துக்கு சங்கம் துவங்கப்படுவது இந்தியாவிலேயே இதுதான் முதல் முறையாம், இங்கிலாந்தில் 'ஸர்ரே'யில் உள்ள கழகத்துடன் இணைந்து இது செயல்படுமாம், இரண்டு மாதத்துக்கு ஒரு முறை கூடி ஷேர்லக் ஹோம்ஸ் கதைகளை விவாதிப்பது பழைய ஹோம்ஸ் படங்களைத் தருவித்துப் போட்டுக் காண்பிப்பது போன்றவை திட்டங்கள்!

-சகவர் குமார்



மாமி எல்லாப் பொறுப்பும் தன்னுடையதே போல் பேசிக்கொண்டே போனாள்.

மற்றக் கதைகளாக இருந்தால் நித்யாவுக்குப் போர் அடித்திருக்கும். ஆனால் கண்ணனைப் பற்றிய இந்தக் கதை ஏனோ அவள் கவனத்தை வெகுவாக ஈர்த்தது.

“அம்மாவுக்கு எப்படி இருக்கு நித்யா?''

அவள் திடுக்கிட்டாள்.

வாசலில் டாக்சி நின்ற சப்தத்தையோ, மாடிப் படிகளில் அவனது பூட்சின் ஒலியையோ தான் அறிந்து கொள்ள முடியாத அளவு சிந்தனை வயப்பட்டிருந்ததை எண்ணி வெட்கினாள்.

''பரவாயில்லை. பக்கத்து அறையில்தான் படுத்திருக்கிறார்கள். சில சமயங்களில் மட்டும் தூக்கமா மயக்கமா என்ற நிலை.''

அவள் அவனோடு அறைக்குள் நுழைந்தாள்.

மீண்டும் பார்வதியைப் பரிசோதித்துவிட்டு அதே மருந்துகளைத் தொடர்ந்து கொடுக்கச் சொன்னான். பார்வதி அவனிடம் அதிகம் பேச முயன்றபோது ஓய்வுதான் அவளுக்கு அவசியம் என்பதை வலியுறுத்திவிட்டு வெளியே வந்தான்.

நித்யா நின்றிருக்கும் ஜன்னல் ஓரமாகத் தானே ஒரு நாற்காலியை இழுத்து விட்டு அமர்ந்தான். அவள் கொடுத்த காப்பியை ரசித்துக் குடித்தான். பார்வை சிறுவர் பூங்காவில் நிலைத்திருக்க மெல்லத் தொடங்கினான்.—

''நித்யா! சில உண்மைகளைச் சம்பந்தப் பட்டவர்களிடம் முதலிலேயே தெரிவித்து விட வேண்டியது டாக்டர்களின் கடமை. அம்மாவுக்கு ஏற்பட்டிருப்பது ஒருவகையான இருதய நோய். இந்த நோயில் பொம்மை போல் பல வருடங்கள் வாழ்ந்து கொண்டிருப்பவர்களும் உண்டு. பொசக்கென்று போய்விடுபவர்களும் உண்டு. அத்துடன் இவர்களுக்கு இரத்தக் கொதிப்பு வேறு. மிகக் கவனமாக இருக்க வேண்டியதுதான்.''

''டாக்டர்.... எனக்கு அவர்களைத் தவிர வேறு யாருமே.....''

கண்ணன் அவளைப் பரிதாபமாகப் பார்த்தான்.

''ட்ரை அவர் பெஸ்ட் நித்யா. நாம் நல்லதையே நினைப்போம். இன்னும் நான்கு மாத காலம்தான் நான் இங்கு இருப்பேன். சர்க்கார் ஆஸ்பத்திரியில் ஒரு டாக்டருக்குப் பதிலாக என்னை அந்த பீரியடுக்கு மட்டும் டெம்பரரியாக மாற்றி இருக்கிறார்கள். பிறகு எந்த ஊரோ? அதுவரை என்னால் இயன்ற உதவி எதுவும் உங்களுக்குச் செய்யக் காத்திருக்கிறேன்.''

கண்ணன் எழுந்தான். அவள் கொண்டு வந்து கொடுத்த ஃபீஸ் என்னவென்றுகூடப் பார்க்காமல் மறுத்துவிட்டுப் புறப்பட்டு விட்டான்.

அம்மாவுக்குப் பின்....?

நித்யாவுக்கு வாழ்க்கையைப் பற்றி நினைத்துப் பார்க்கவே பயமாக இருக்கிறது.

கண்ணன் தினமும் தவறாமல் வந்தான்.

பார்வதியின் உடல்நிலையில் மிகுந்த அக்கறை செலுத்தினான்.

# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!







## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க
போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில்
கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்
புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக
உணவுப்பான நிபுணர்கள் — காட்பரி தயாரித்து அளிப்பது.







**காட்பரிஸ் போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை

மிச்சப்படுத்துங்கள் பணத்தை...
உங்கள் விருப்பமான
ரீ:பில்பேக் வாங்கிடுங்கள்.

OBM-7538 TM

பார்வதி மீண்டும் எழுந்து நடமாடத் தொடங்கி விட்டிருந்தாள். கண்ணன் சொன்னது போலவே ஒரு பொம்மையைப் போல் வளையவந்தாள். நான்கு மாதங்களும் இமைப் பொழுதில் ஓடிவிட்டன.

அன்று அவன் ஊருக்குப் புறப்பட்ட போது:

''நித்யா, இந்த ஊர், இங்குள்ள ஜனங்கள் இந்தச் சூழ்நிலை எல்லாமே ஏதோ ஒருவகையில் எனக்குப் பிடித்துப் போய்விட்டது. ஒரு சமயம் சின்ன வயசில் சில காலம் நான் இங்கு தங்கி வளர்ந்தது காரணமாய் இருக்கலாம். அன்றைக்கு முதன் முதலில் உங்களை எல்லாம் சந்தித்தபோது எனக்கு அந்தக் கால நிகழ்ச்சிகள்தான் நினைவுக்கு வந்தன. அது ஒரு கவலையற்ற பருவம். அதோ அந்தப் பூங்காவில் விளையாடிக் கொண்டிருக்கும் சிறுவர்களைப் போல. ஆனால் அது போன்ற பருவத்தில்கூட நான் பல ஏமாற்றங்களையும் ஏக்கங்களையும் ஏற்றுச் சகித்திருக்கிறேன். ஒரு வகையில் என் முன்னேற்றத்திற்கும் உறுதிக்கும்கூட அது போன்ற நிகழ்ச்சிகள் தான் தூண்டுகோலாக அமைந்ததோ என்னவோ...''

அவன் சாதாரணமாகத்தான் பேசிக் கொண்டிருந்தான். ஆனால் அதில் சில வார்த்தைகள் தன்னைக் குத்திக் காட்டுவது போல் அமைந்து விட்டது அவன் குற்றமல்ல என்பதையும் அவள் உணர்ந்திருந்தாள்.

அவன் தொடர்ந்தான். ''ஏனோ தெரியவில்லை. மனத்தின் சில ஆசைகளுக்கு அதன் அடித்தளத்தில் வேர் காண முடியாதது போல் இப்போது எனக்கும் ஓர் ஆசை. மீண்டும் இதே ஊருக்கு மாற்றிக் கொண்டு வரவேண்டும் அல்லது சொந்தமாக இங்கு ஒரு டிஸ்பென்சரியைத் தொடங்கிவிட வேண்டும் என்பது. ஆனால் அதற்கு எவ்வளவு காலம் ஆகும் என்பதை என்னால் நிர்மாணிக்க முடியவில்லை. ஏனென்றால் காலம் மனிதர்களுக்காகக் காத்திருப்பதில்லை. மனிதர்கள்தான் காலத்தை எதிர் நோக்கிக் காத்திருக்க வேண்டும்!''

ஓர் ஆழ்ந்த பார்வையுடன், அவன் விடை பெற்றுக் கொண்டான்.

மழை காலம்.

சிறுவர் பூங்கா வெறிச்சோடிக் கிடந்தது. நித்யாவின் மனம் போல.

இந்த நிலை சில தினங்களில் மாறும். மீண்டும் அப்பூங்காவில் சிரிப்பும் கலகலப்பும் தோன்றும்.

ஆனால் நித்யாவின் மனத்தில்?

அங்கும் அப்படித்தான்—

கண்ணன் அவன் சொன்னபடி வந்தால்? மீண்டும் மாடிப் படிகளில் அவன் பூட்ஸ் ஒலி கேட்டால்!

''நித்யா!''

''இதோ வரேம்மா'' — அவள் பார்வதிக்குப் பணிவிடை செய்ய ஓடுகிறாள்.



# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES, G. & TH

## கப்பல்களின்

# ராணி எலிஸபெத்-2

கப்பல்களின் ராணி என்று அழைக்கப்படும் க்வீன் எலிஸபெத்-2 சென்னைத் துறைமுகத்தை பிப்ரவரி கடைசியில் தொட்ட போது, உள்ளே நுழைந்து பார்க்கக் கொடுத்து வைத்த பாக்கியசாலிகள் வெகு சிலர்தான், பத்திரிகையாளர் உட்பட! திரட்டிய தகவல்களை இதோ தந்திருக்கிறோம்:

- இது முழுக்க முழுக்க உல்லாசக் கப்பல். பம்பாய் – கல்கத்தா எல்லாம் விட்டு விட்டுச் சென்னைக்கு ஏன் வந்தது? உல்லாசப் பயணிகள் வெகு விரைவில் பல சுற்றுலா இடங்களைப் பார்த்துவிட்டு வர இதுதான் சௌகரியமான துறைமுகமாம். (சென்னைக்கு ஒரு ஷொட்டு. மத்திய அரசின் சுற்றுலாத் துறை கவனிக்க!)

✖ ஆசிரியையிடம் போக்குக்காட்டும் போக்கிரிச் சிறுவன்



- சாம்யுவல் குனார்டு 1839ல் துவக்கிய பிரம்மாண்டமான கப்பல் கம்பெனி பிரிட்டானியா, க்வீன்மேரி, எலிஸபெத்1 எல்லாம் இவர்களுடையதுதான்.

- க்வீன் எலிஸபெத்-2ன் அங்க லட்சணங்கள் வேக விவரங்கள்: 67140 டன் எடை. 963 அடி நீளம். 105½ அடி அகலம். 205½ அடி உயரம் மெயின் மாஸ்ட் 204 அடி உயரப் புகைக் கூண்டு. ஏப்ரல் 22, 1969ல் முதன் முதலாகக் கடல் அலைகளைத் தொட்டது!

- இது ஒரு மிதக்கும் நகரம். இதற்கு ஈடு இணை கிடையாது. இதில் மொத்தம் 13 மாடிகள்!

- நான்கு ரெஸ்டாரண்டுகள்; ஆறு 'பார்'கள். இரண்டு 'பால்ரூம்'கள். நைட் கிளப்புகள் இரண்டு; நீச்சல் குளங்கள் நான்கு. உடற் பயிற்சிக் கூடம், ஓட்டப்

பயிற்சிக்குப் பாதை, சினிமா தியேட்டர் கேளிக்கை விடுதிகள், ஆஸ்பத்திரி, நூலகம் எல்லாம் உள்ளேயே!

- நவீன விஞ்ஞானத்துக்கும், மின்னணுத் துறைக்கும் எலிஸபெத்-2 ஒரு முன்னோடி. பழக என்றால் இவர்கள் பயணிகளிடம் காட்டும் பரிவும் உபசரிப்பும்!

- காப்டனைச் சேர்த்து 1000 பேருக்கு மேல் பணி புரிகிறார்கள். பயணம் செய்பவர்கள் 1400 பேருக்கு மேல். 140 பேர் சென்னையிலிருந்து மட்டும் இதில் பயணமானார்கள், இரண்டு—மலாய்க்காரர்கள் உட்பட.

- எண்பது நாளில் உலகச் சுற்றுப் பயணம் செய்யும் எலிஸபெத் ராணி-2 ஜனவரி 19ம் தேதி புறப்பட்டாள், அமெரிக்காவில் இருக்கும் எவர்க்ளேட்ஸ் துறைமுகத்திலிருந்து. பார்படாஸ் தீவுகள் சால்வடார், ரியோடி ஜெனிரோ, தென் அமெரிக்கா, தென் ஆப்பிரிக்கா, மரீஷியஸ், கொழும்பு வழியாக இப்போது சென்னைக்கு வந்திருக்கிறாள். இங்கிருந்து சிங்கப்பூர், பாங்காக், ஹாங்காங், கொரியா, ஜப்பான், ஹோனலூலு, லாஸ் ஏஞ்சலிஸ் – பிறகு பனமா கால்வாய் வழியாக, பழையபடி, புறப்பட்ட இடமான எவர்க்ளேட்ஸ், நியூயார்க். பயணம் எப்படி?

- இதில் பணக்காரர் என்றால் பெரும் பணக்காரர் மட்டுமே பயணம் செய்ய முடியும். 80 நாளில் உலகத்தைச் சுற்றிப்பார்க்க ஒன்றரை லட்ச ரூபாய் முதல் ஆறரை லட்ச ரூபாய் வரை பலதரப்பட்ட வகுப்புக்களுக்கான டிக்கட். ரொம்பக் குறைச்சல்தான், இல்லே?

- வீட்டில் உள்ள சொகுசையும் சௌகரியத்தையும் விட சொர்க்க போகத்தை அனுபவிக்க வேண்டும் என்கிறவர்களுக்கு ஏற்ற இடம் எலிஸபெத்-2. குட்டி கோல்ஃப் ஜைப்பில் விளையாடலாம். கேளிக்கை ஆட்டங்களில் பொழுதைப் போக்கலாம். ஹெல்த் ஜைப்பில் ஹாய்யாக உடல் பரிசோதனை செய்துகொள்ளலாம்!

⌘ வந்தவுடன் வரவேற்பு (தனஞ்சயன் குழுவினர்)





⌘ குழந்தைகளின் விளையாட்டரங்கு

- சமையல் வகுப்பில் புதுப் புது தினுசுகள் கற்றுக்கொள்ளலாம். குழந்தைகளைப் பார்த்துக் கொள்ள அன்பான ஆசிரியைகள். தினமும் புதுப் புது சினிமாக்கள் பார்க்கலாம். ட்யூடி ஃப்ரீ ஷாப்பில் கிடைக்கின்றதை எல்லாம் வாங்கலாம்!

- புகழ் பெற்ற தனஞ்செயன் குழுவினர் சென்னையில் இந்த அதிர்ஷ்டசாலிப் பயணிகளை வரவேற்று நடன விருந்து அளித்தனர்.

– சாருகேசி

படங்கள் : ஜி. கிருஷ்ணன்

⌘ கப்பலின் மேலேயிருந்து ஒரு தோற்றம்









விமல்
இந்தியாவின் உயர்தர நாகரீகமான
ஷர்ட்டிங்குகளில் பற்பல
ரகங்களை அறிமுகப்படுத்துகிறது.

ப்ளெய்ன்கள் · பிரின்டுகள் · பேஸல்கள் · செக்குகள் ·
கோடுகள் அவைகளில் 1600க்கு மேல்




ஷர்ட்டிங்குகள்
இந்தியாவின் மிக நவீன
டெக்ஸ்டைல் தொழிற்சாலையிலிருந்து

Mudra/RTI/ 528TAM




# இந்

இந்து மதமானது அரசாங்க அங்கீகாரம் பெற்றுத் திகழும் நாடுகள் உலகிலேயே இரண்டுதான். ஒன்று நேபாளம். மற்றொன்று ஈழம். இலங்கையில் வரும் ஏப்ரல் 21ம் தேதி தொடங்கி ஐந்து நாட்கள் கோலாகலமான முறையில் 'அகில உலக இந்து மாநாடு' நடைபெறவுள்ளது. இது. முழுக்க முழுக்க அரசு ஆதரவிலேயே நடைபெறுவதுடன் பரந்த நோக்கத்தை உள்ளடக்கியது.

இந்து மதத்தின் உட்பிரிவுகளுக்கிடையே இசைவை ஏற்படுத்துவதுடன் உலகின் பிற பெரும் சமயங்களைச் சேர்ந்தவர்கள்ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள 'இந்த மாநாடு வழி வகைகளைக் காணும்.

மாநாட்டின் முத்திரைச் சின்னத்தில் ஆதிசேஷன் தலை மீது உலக உருண்டை. கோவில் கோபுரம். சைவ வைணவத் திருச் சின்னங்கள் ஆகியவை காணப் படுகின்றன. எனினும் அறிவியல் முன்னேற்றத்தால் எழும் புதிய கருத்துக்களை யொட்டி இந்து சமயக் கோட்பாடுகளையும் செயல் முறைகளையும் ஆராய்ந்து விளக்கம் காணுவதும் மாநாட்டு நோக்கங்களுள் ஒன்று.

இலங்கை ஜனநாயக சோஷலிஸக் குடியரசின் பிரதேச அபிவிருத்தி. இந்து சமய, இந்து கலாசார தமிழ் அலுவல்கள் அமைச்சு இந்த மாநாட்டை நடத்துகிறது. இந்தத் துறையின் அமைச்சர் கௌரவ செ. இராசதுரை அவர்களின் சிந்தனையில் உருவான திட்டம் இது. நீண்ட கால அரசியல்



● மாண்புமிகு இராஜதுரை



# மதத்துக்கு உலக மாநாடு!

அனுபவமுள்ள இவர் தமிழ் மொழி இலக்கியங்களில் திறமை வாய்ந்தவர். சிங்களவர். தமிழர் நல்லுறவுக்காகப் பெரும் பணி ஆற்றி வருபவர். இந்து சமயம், பௌத்தம், இஸ்லாம், கிறிஸ்துவ மதங்களுக்கிடையே நல்லுறவும், இணக்கமும் ஏற்பட மனப்பூர்வமாய்ப் பாடுபடுகிறவர். ஆற்றல் மிகுந்த பத்திரிகையாளராகவும் விளங்கியவர். நான்கு மதத்தவரின் நன்மதிப்பையும் பெற்றவர்.

இலங்கையில் கல்விக் கூடங்களில் சமய போதனை கட்டாயப் பாடம்! இந்தப் போதனையின்போது மாணவர்கள் தத்தம் சமயங்களின் விளக்க உரை, நடைபெறும் வகுப்புக்களில் பாடம் கேட்கப் பிரித்து அனுப்பப்படுகிறார்கள்.

பல்கலைக் கழக நுழைவு வரை தொடர்கிற இந்த மத போதனை புகுமுக வகுப்பு இரண்டு வருடமும், 'கலாசார மரபியல்' என்ற பெயரில் பாட முறையில் இடம் பெறுகிறது.

சமயப் பாடம் கற்பித்தல் பற்றி ஆராய இலங்கை அரசு அமைத்த நிபுணர் குழு 'சமயக் கல்வி மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சி பெற வேண்டிய பாடமாக' அமைய வேண்டும் எனப் பரிந்துரை செய்துள்ளது. சமய சார்பற்ற அரசு என்ற பெயரில் மத போதனையையே புறக்கணிக்கும் நமது அரசுக்கு எப்போதுதான் கண் திறக்குமோ?

யாழ்ப்பாணம் பல்கலைக் கழகத்தில் 'இந்து நாகரிகம்' பற்றி ஆராய ஒரு பீடம் அமைந்துள்ளது.

○ கி. லட்சுமணன்



'மொழி ஒரு பாத்திரம். அதன் மூலம் பெற்றுப் படைக்கக் கூடியது தத்துவங்கள்' என்கிறார் திரு கி. லட்சுமண ஐயர். இந்த அகில உலக இந்து மாநாட்டின் செயலூக்கக் குழுவின் தலைவராகத் தமிழகம் வந்துள்ள இவர் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் தமிழிலும், காசியில் தத்துவ ஞானத்திலும் எம். ஏ. பட்டம் பெற்றவர். 'இந்தியத் தத்துவ ஞானம்' என்கிற அருமையான நூலை எழுதி இலங்கை, தமிழ்நாடு அரசாங்கங்களின் பரிசும் பெற்றவர்.

''சமயங்கள் மனித குல மேம்பாட்டுக்காக ஏற்பட்டவை. ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு முறையில் இந்த நோக்கத்துக்காகப் பணியாற்றுகின்றன. மத விரோதப் போக்குகளை அறவே மறந்து நட்புறவும் ஒருமைப்பாடும் செழித்தோங்க இந்த இலங்கை மாநாடு கால்கோள் நடத்துகிறது'' என்கிறார்.

இந்து நாள் மாநாட்டில் கருத்தரங்குகள், கண்காட்சிகள், கலை விழாக்கள் எல்லாம் உண்டு. உலகின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள இந்து சமயப் பழக்கங்கள், மரபுகள் பற்றி விளக்கம் அளிக்கும் வகையில் பல சான்றோர்களின் கட்டுரைகளுடன் மாநாட்டு மலர் ஒன்றும் தயாராகிறது.

கீழை நாடுகளின் சொர்க்கம் என்பார்கள் இலங்கையை. இந்தச் சொர்க்க பூமியில் நடைபெறப் போகிற அகில உலக இந்து மாநாடு பல வழிகளில் உலகளாவிய பெருமை பெறும்.

- சுப்ரபாலன்

---

''ஒரு ஜோக் சொல்லேன்''

''புதுசா, பழசா?''

''புதுசு தான்''

''பத்திரிகையிலே வந்ததா, வராததா?''

''வந்ததே சொல்லேன்''

''உ. ராஜாஜி எழுதினதா, வெ. சீதாராமன் எழுதினதா?''

''வெ. சீதாராமன் எழுதினதே சொல்லேன்''

''கல்கியில் வந்ததா, சாவியில் வந்ததா?''

''கல்கியில் வந்ததே சொல்லேன்''

''இரு. கொஞ்சம் யோசிச்சுச் சொல்றேன்''

''உன் கிட்டே போயிக் கேட்டேன் பாரு. அதைவிடக் கடைக்குப் போயி கல்கி வாங்கி பூரா ஜோக்கையும் படிச்சிருக்கலாம்.''

-நயினாரகரம் மணி

---

# அன்றலர்ந்த பனிமலராய் உங்கள் அழகு சிரிக்கிறது...





செந்தாமரையான அழகு சிரித்திட
சொந்தமுடன் முகத்தில் பூசுவீர் லாக்டோ-காலமைன் ப்ளஸ்
புலரும் காலையில் பனித்துளி பட்டு
மலரும் பன்னீர்ப்பூவாய் மாறும் முகமெனும் மொட்டு
துவண்ட மேனியை அன்புடன் துடித் தெழச் செய்யும் அதிசயம்
உவமையில்லா லாக்டோ-காலமைன் ப்ளஸ்ஸின் ரகசியம்
அதன்... ஆலன்டைன் அளிக்குது இளமையின் மென்மை
வைட்டமின் ஈ வளமுடன் தருகுது பனித்துளியின் புதுமை
விட்ச்ஸ்ஹேஸல் எனும் அஸ்ட்ரின்ஜெண்ட மேனியில்
செய்திடும் நன்மை.

இங்கிதமாய் பூசுவீர் லக்டோ-காலமைன் ப்ளஸ் அனுதினம்
மங்காத இளமை எழிலுக்கோர் வரப் பிரசாதம்.

## லாக்டோ-காலமைன் ப்ளஸ்

டுபோர்-இன்டர்ஃப்ரான் லிட் (காஸ்மெடிக்ஸ் டிவிஷன்)

## மேனிக்கு அளிப்பீர் மென்னெழில்!

Sista's-DIL-693-81 [ Tam

# பாலன் வடிவில் மாலன்




பத்மஜா

"உடுப்பிக்குப் போறேன் ஸார்!"

"ஓ! வைஃப் ஊரிலே இல்லையாக்கும்?.. ஏன் ஸார் பக்கத்திலே ஸ்வர்ண பவன் இருக்கறச்சே இங்கே போவானேன்? ஆத்துச் சாப்பாட்டை விட இது ஜோரா?"

"ஸார், நான் போறது உடுப்பி ஹோட்டலுக்கல்ல! உடுப்பி க்ஷேத்திரத்திற்கு!"

வழியில் வந்த நண்பரின் இருச் சந்தேகத்தை நிவர்த்தி செய்துவிட்டு எதிர்வீட்டு மீனு, மீனு, மீனுட்சியின் 'டாடா' இரு வழியனுப்பலோடு திருத்தலம் காண விரைந்தேன்.

மங்களூர் போய் அங்கிருந்துதான் உடுப்பி! ரயில்வே வரைபடத்தைப் பார்த்தால் சென்னையிலிருந்து மங்களூர் செல்லும் ரயில் பாதை நாமம் வடிவத்தில் இருப்பதைக் காணலாம்.

திருமாலின் திருயோசனையோ இந்த வைஷ்ணவ வழி!

மங்களூர் வந்தது.

பஸ் ஏறி, அட்சர சுத்தமாய், நிறுத்தி, நிதானமாய் ஆயிரத்தெட்டு காயத்ரி மந்திரத்தைக் கண்ணை மூடிக் கொண்டு உச்சரித்து முடித்து

– கண்ணைத் திறந்தால் உடுப்பி!

பஸ் விட்டு இறங்கியதும் ஆட்டோ ரிக்ஷாக்காரன் முன்வந்தான்.

"ஸ்வாமி, பன்றி... பன்றி..."

பன்றினேன்.

வந்ததுமே வராக அவதாரத்தை விளம்பரப் படுத்திய, நினைவுபடுத்திய அவனது 'பன்றி'க்கு நன்றி சொன்னேன்.

ஏன்! பிரயாவுக்கும்தான்!

பக்தர்கள் தங்குவதற்கான இடத்தைக் கோயிலின் சூழ்நிலைக்கருகிலேயே கட்டித் தந்திருக்கிறார். சௌகரியமான பயணிகள் சத்திரத்தை.

அதில் இறங்கினேன் மாமனார், மாமியார் மனைவி, சகிதமாய்.

மறுநாள் விடிகாலையில் மத்வசரோவாவின் பச்சையில் குளித்துவிட்டு, சூரிய பகவானுக்கு 'நமஸ்காரம்' என்றேன்.

வாழ்க்கைக்குத்தான் மனைவி 'கைடு' என்றால் இந்த க்ஷேத்திரத்துக்கும் அவளே கட்டிளம் கைடு!

சொன்னாள் க்ஷேத்திர புராணத்தை. சில வியாபாரிகளின் கப்பல், காற்றும், புயலால் திக்குமுக்காட, அதைக் கரையேற உதவினார் ஆனந்த தீர்த்தர் என்பவர். அவருக்கு நன்றி சொல்லும் பொருட்டு எது வேண்டும் என்று பொன்னும் பொருளும் அள்ளித் தர,

"எதுவும் வேண்டாம். உங்கள் கப்பலின் அடித் தளத்தில் இருக்கும் சந்தனக் கட்டைகளைக் கொடுங்கள்" என்றார்.

கொடுத்தனர் வியாபாரிகள்.

அதில் ஒன்று பிளக்க, அதிலிருந்து வெளி வந்தான் கிருஷ்ணன் – ருக்மிணி பூஜை செய்தபாலகிருஷ்ணன். கையில் கடக்கோல்!

"அபிஷேகத்தைப் பாருங்கள்!"

சிரசில் வழிந்து, தோளில் தவழ்ந்து, இடையில் நழுவி – பிறகே பூமாதேவி ருசி பார்க்கிறாள். அற்புதமான அபிஷேகம் செய்வது பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கும் பாலக ஸ்வாமிஜி.

பெரியவர்கள் செய்வதில்லை.

வலம் வந்தோம்.

யார் அது? என்னை நெட்டித் தள்ளுவது? மனைவியா?

இல்லை.

மாடு!

(அதுதானே பார்த்தேன் கொஞ்சம் இதமாக இருக்கிறதே என்று!)

மாலனை மாடுகளும் வலம் வருகின்றன நம்மோடு.

மற்றக் கோயில்களில் இருப்பது போல் மூலஸ்தான நுழைவாசல் பெரிதாக இங்கு இல்லை.

உலகளந்த மாலனைத் தரிசிக்க ஒன்பது துவாரங்கள். கீதையில் சொன்னான் கண்ணன்: "நவ தேவதைகளின் மூலமாய் இப்புவியினைப் பரிபாலனம் செய்கிறேன்" ஆக இந்த நவசக்திகள் மூலமாய்க் கண்ணனைக் காணலாம் என்பதை வலியுறுத்துவது போல் இருந்தன அந்த ஒன்பது துவாரங்கள்.

பக்த கனகதாசர் கண்ணீர் மல்கப் பாடி வருந்திக் கேட்க, சுவரைப் பிளந்து கொண்டு காட்சி தந்தானும் கண்ணன்.

அதை கனகதாசக் கிடுக்கி (துவாரம்) என்று பெயர். மனைவியின் கைடு முத்துக்கள் இவை.

"அதோ பாருங்கள் அதுதான் அனந்தேஷ்வரர் ஆலயம். இதில் உள்ள லிங்கத்தை வலம் வந்ததால்தான் மத்வாச்சாரியார் பிறந்தாராம் அவர் தாய்க்கு!

"அதோ பார்த்தீர்களா அந்தச் சின்ன இடத்தில்தான் மத்வாச்சாரியார் நுழைந்து அங்கிருந்து ஒரு பாதாளச் சுரங்கம் சிருஷ்டித்தார். நேரே பத்ரிக்குச் சென்றார்!

–தேர் இழுத்தபோது (தங்கிய நாட்களில் தினமும் தேர் உற்சவம்.)

"ஹே கிருஷ்ணா! உனது தெய்விகத் தேரை உனது அடியார்களோடு நானும் இழுக்

கிறேன். ஐம்புலன்களெனும், கட்டுக்கடங்காது தறிகெட்டு ஓடும் குதிரைகளால் எங்கள் சக்திக்கு அப்பாற்பட்டதாய்ப் பறக்கும் மனத் தேரை நீ இழுத்து அடக்குவாய் அப்பனே!'' என்றேன் மனதார.

மறுநாள் மல்பி கடற்கரையில் இருந்தோம். மனைவி ஆரம்பித்தாள்.

''பாருங்கள், இங்கேதான், இந்தக் கரையோரத்தில்தான் ஓர் ஆலயத்தில் முதன் முதலில் உடுப்பி மூலஸ்தான விக்ரகம் இருந்தது. பிறகுதான் ஸ்ரீமத்வாச்சாரியார் உடுப்பிக்குக் கொண்டு போய் பிரதிஷ்டை செய்தாராக்கும்!''

உடுப்பி கிருஷ்ணனை வலம் வந்து நமஸ்கரிக்கும்போது அங்கே ஓர் இடத்தில் ஸ்ரீ சுப்ரமணிய விக்ரகம் கண்டேன்.

கலிகாலம் முற்றிப் போய் வறுமையும், பஞ்சமும் தலைவிரித்தாட, கோவிலை நிர்மாணிக்கப் போதிய பண வசதி இல்லாமற் போய்விடும் என்பதால் அந்தத் தருணத்தில் பயன்படுத்த வேண்டிய பொக்கிஷம் இந்த சுப்ரமண்ய விக்ரகத்துக்குக் கீழ் பாதுகாப்பாய் வைக்கப்பட்டுள்ளது.

ஒரு வைணவ ஆலயத்தைப் பாதுகாக்க ஒரு சைவக் கடவுளை நாடுகிறார்கள், நாடியிருக்கிறார்கள்.

சிரித்த முகத்தோடு காணப்படுகிறான் சிங்கார வேலன்!

# எவ்வளவு தெரியும்?

# சில தமிழ்ச் சொற்கள்...



1. தொடுதல் என்ற சொல்லுக்கு வேறு ஒரு பொருளும் உண்டு. அது...
(அ) பேசுதல் (ஆ) தோண்டுதல் (இ) ஏறுதல் (ஈ) மிதித்தல்

2. காயம் என்பது ஒரு மருந்துச் சரக்கு. அது எது?
(அ) கடுகு (ஆ) கக்கு (இ) மிளகு (ஈ) தேன்.

3. உரிமைப் பத்திரங்களை ஆவணம் என்கிறோம். ஆவணம் என்பதற்கு இதுவும் ஒரு பொருள்.
(அ) கடை வீதி (ஆ) திமிர் (இ) மலையருவி (ஈ) கப்பல்.

4. பணமரத்தைக் குறிக்கும் சொல் எது?
(அ) கீற்று (ஆ) வடம் (இ) புல் (ஈ) முகடு.

5. அன்னை என்பது இவளையும் குறிக்கும்.
(அ) மைத்துனி (ஆ) அண்ணன் மனைவி (இ) அத்தை (ஈ) தோழி.

6. இது ஒரு கோளின் பெயர்
(அ) குருதி (ஆ) பவளம் (இ) வாழை (ஈ) மாலை

7. அடிமை என்னும் பொருள் தரும் தாதி என்னும் சொல் இந்த நட்சத்திரத்தைக் குறிக்கும்.
(அ) விசாகம் (ஆ) பரணி (இ) கார்த்திகை (ஈ) ரேவதி

8. பின்னை என்பது யாரைக் குறிக்கும்?
(அ) சரசுவதி (ஆ) பார்வதி (இ) இலக்குமி (ஈ) அருந்ததி

9. முனி என்றால்
(அ) குதிரைக் குட்டி (ஆ) பசுங்கன்று (இ) சிங்கக் குட்டி (ஈ) யானைக் கன்று

10. சிவன் திருமால் இருவரையும் குறிக்கும் பொதுவான சொல் எது?
(அ) அருகன் (ஆ) அனந்தன் (இ) வேலன் (ஈ) அனங்கன்

அமைப்பு : **வெண்பால்**

விடைகள்:

1. (ஆ) தோண்டுதல்
2. (இ) மிளகு
3. (அ) கடை வீதி
4. (இ) புல் (பனம்புல்....)
5. (ஈ) தோழி
6. (அ) குருதி — செவ்வாய்க் கிரகத்தின் பெயர்.
7. (ஆ) பரணி
8. (இ) இலக்குமி
9. (ஈ) யானைக் கன்று
10. (ஆ' அனந்தன்

10ம் சரியானால் அற்புதம். 6 முதல் 9 அருமை. 3 முதல் 5 மகிழ்ச்சி அதற்கும் கீழே சோகம்.




# போர்ஹென்ஸ் ஃப்ளோரைடு ஈறுகளையும் பற்களையும் பாதுகாக்கிறது




## சுவைமிக்கது



## நுரை மிக்கது !

### ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு



ஈறுகள் வலுவிழந்து மெத்தென்று இருந்தால் ஆரோக்கியமான பற்கள்கூட ஆட்டம் கண்டு விழுந்துவிடும். போர்ஹென்ஸில் உள்ள விசேட சேர்க்கைப் பொருள் (அஸ்ட்ரிஜென்ட்) ஈறுகளை வலுப்படுத்தி ஈறு உபாதையை எதிர்க்க உதவுகிறது.

### பற்களுக்கு ஃப்ளோரைடு பாதுகாப்பு



சிறுவர்களுடைய பற்களின் எனாமலை ஃப்ளோரைடு உறுதிப்படுத்துவதோடு பற்களில் குழி விழுவதையும் தடுக்கிறது. போர்ஹென்ஸிலுள்ள ஃப்ளோரைடு பெரியவர்களுடைய பற்களின் எனாமலில், பற்சொத்தைக்குக் காரணமான கிருமிகளை எதிர்க்கும் சக்தியை வலுப்படுத்துகிறது.

## ஃப்ளோரைடு அடங்கிய
# போர்ஹென்ஸ்
## ஈறுகள் பற்கள் இரண்டையுமே பாதுகாக்கிறது




Regd. T.M : Geoffrey Manners & Co. Ltd

ஜெயந்தன்

9

**அடக்கப்பட்ட உணர்வுகளின் புகலிட மான மன நோய்க் காட்டில்...**

**வ**ருஷம் ஒன்று கழிந்து போயிருந்தது. இப்போது வரதராஜுலுவும் கலோசனுவும் தனிக் குடித்தனம் இருந்தார்கள் திருச்சியில். வரதராஜுலுவுக்கு இங்கே மாற்றலாகியிருந்தது. இந்த மாறுதலை அவனுகத்தான் ஏற்பாடு செய்து கொண்டான். இதற்கு அவன் கலோசனுவுக்கும் தன் வீட்டாருக்கும் வெவ்வேறு காரணங்களைச் சொல்லியிருந்தான். கலோசனுவிடம், இவளது நன்மையை உத்தேசித்துத்தான் இந்த மாறுதல் என்றும், என்னதான் தாயாக இருந்தாலும் அம்மாவின் பிடுங்கல் தனக்கே சங்கடமாக இருக்கிறதென்றும் ஆகையால் வேறு ஊர் மாற்றிக் கொண்டு போய்விட்டால் இந்தத் தொல்லை தன்னுல் விலகிவிடுகிறது என்றும் சொன்னுன். இதுகூட, இவனது மாறுதல் கோரும் விண்ணப்பத்தை இவன் பார்த்துவிட்ட காரணத்தால். பெற்றோரிடமோ, இந்த மாறுதலை இலாகாவில் அவர்களாகவே போட்டிருப்பதாகவும், இதில் கூட நன்மை இருக்க வாய்ப்பு இருக்கிறதென்றும் பதவி உயர்வுக்கு இந்த இடத்தில் பார்ப்பது உதவலாம் என்றும் சொன்னுன். இந்த இடத்திற்கும் மொத்த குடும்பமாகக் குடிபெயர அம்மா விரும்பலாமென்றுலும் பல்வேறு அசௌகரியங்களால் அது சாத்தியப்படாது என்பது அவனுக்குத் தெரியும். ஆனுல் இவனது மாறுதல் நோக்கத்திற்கு உண்மையான காரணம் ரேவதி.

அன்று காலை நிலையத்துக்குப் புறப்படு முன் வரதராஜுலு கலோசனுவிடம், ''நாம அடுத்த வாரம் மதுரை போறேம்'' என்றுன்.

''ஏன்?''

''சொல்லு பார்க்கலாம்.''

''தெரியலியே.''

''வர்ற பதினேராம் தேதி; ஏப்ரல் பதினேராம் தேதி.''

''அப்பிடின்னு?''

''அதுகூடத் தெரியலையா?''

கலோசனு யோசித்துவிட்டு, ''ஓ. நம்ம மேரேஜ் டேயா?'' என்றுள்.

''ஆமா.... பர்ஸ்ட் அனிவர்ஸரி. அதைக் கொண்டாடத்தான் மதுரை போறேம்.''

கலோசனு அவ்வளவு சுவாரஸ்யமில்லாமல், ''ஏன், இதைக் கொண்டாட மதுரை போகணுமா என்ன? எதுக்கு டமாரம் எல்லாம். பேசாம இங்கயே கொண்டாடிட்டுப் போறது?'' என்றுள்.

''ம்? அப்பிடியா சொல்றே?'' என்று உண்மையில் யோசித்த வரதராஜுலு ''சரி, ஒரு வாரம் இருக்குல்ல. யோசிப்போம்'' என்று புறப்பட்டான்.

'ஏப்ரல் பதினென்று' — கலோசனு நினைத்துப் பார்த்தாள். அதற்குள் ஒரு வருஷம் ஓடிவிட்டதா! என்னதான் நடந்தது இந்த முந்நூற்று அறுபத்தைந்து நாட்களில்? பெரிதாகவோ குறிப்பிடும்படியாகவோ ஒன்றும் இல்லை. கொஞ்சம் கொஞ்சம் சந்தோஷங்கள் கொஞ்சம் கொஞ்சம் உரசல்கள். அவ்வளவு தான்.

இல்லற வாழ்வில் சந்தோஷம் என்பதுஒரு பொது நியதி. அது எதிர்பார்க்கப்படுவதும் சரிதான். ஆனுல் உரசல்களும் எப்படி ஒரு அடிப்படை நியதி போல் சரிக்குச் சரியாக வந்திருக்கிறது? அவளுக்கு ஆச்சரியம். இவ்வளவுக்கும் பெரும்பாலும் தான் எப்போது மற்றவர்களோடு மோதுகிறுள்? தன்னை ஒரு வாங்கிய சரக்காக மற்றவர்கள் பாவிக்க முனையும்போதுதானே? இதுவே ஒரு தொடர் நிகழ்ச்சியாக எப்படி வருகிறது?

தான் மோதாமல், பணிந்து போய்விடுவதிலே உள்ள சௌகரியங்கள் எல்லாம் இவளுக்குத்தெரியாமல்இல்லை.பணிந்துபோவதும் ரொம்ப சுலபமானது. பத்திரமானது. 'நல்ல பெயர்' வாங்கிக் கொடுப்பது. எதிர்ப்பது என்பது தன் சக்தியை ஈடுபடுத்திப் போராடுவது. ஆபத்தானது. இறுதியாக எல்லாரிடத்தும் பகையையும் கசப்பையும் உண்டாக்கித் தருவது. இருந்தபோதிலும் எதிர்த்தாள். ஏன் அப்படி? ஒருவேளை இதில் ஏதும் தனக்கு உள்ளார்ந்த சந்தோஷம் இருக்கிறதா? கடலில் விழுந்தவன் கையில் கிடைத்த எந்த மரக் கட்டையையும் ஆதரவாகப் பிடித்துக் கொண்டு தொங்குவதைப் போல, தான் ஒன்றுமாகவே இல்லாது போய்விடாமல் தனக்கு ஒரு சின்ன அர்த்தமாவது கொடுக்கிற காரியமாக இந்தப் போராட்டங்களை, தான் நிகழ்த்துகிறுளா? அல்லது தான் அந்த ரகுவிடமும் அண்ணனிடமும் எதிர்க்காமல் கோழைப் புழுவாய் நெளிந்து விட்டதை ஈடு செய்து கொள்ள இந்த மனம் இப்படி இயல்கின்ற இடத்தில் கத்தி வீசிக் காட்டுகிறதா?

மீண்டும் ரகுவின் பெயர் குறுக்கே வந்ததும் அவள் உதற முனைந்தாள். 'சீசீ, அந்த நாயை நான் எதற்கு எல்லாவற்றிற்கும் சம்பந்தப் படுத்திக் கொண்டிருக்கிறேன், நான் காட்டுகிற எதிர்ப்பு எல்லாப் பெண்களுமே காட்ட வேண்டிய எதிர்ப்பு. எங்கே பெண் இன்னமும் விலைப் பொருளாகவும் போகப் பொருளாகவும் மட்டும் எடை போடப் படுகிறுளோ அங்கெல்லாம் மூர்க்கமாகக் காட்டப்பட வேண்டிய எதிர்ப்பு. இதில் இந்த ரகு எங்கே வந்தான்?

ஆனுல் அந்த ரகு இதில் வந்தானே இல்லையோ, இவர்களது முதல் ஆண்டு

நிறைவு தினத்துக்கு இரண்டு நாள் முன்னதாக வந்தான் — மறைமுகமாகத்தான் என்றாலும், இவளை அலற அடித்தபடி.

வெள்ளிக் கிழமையன்று நளினியிடமிருந்து கடிதம் வந்தது.

''சுலோசனா,

ரகு மீண்டுமொரு வாழ்க்கையைக் காவு கொண்டு விட்டான் — இம்முறை உயிரையும் சேர்த்து. சுபா என்கிற இந்தப் பெண் மூன்று மாத சூலோடு தற்கொலை செய்து கொண்டு விட்டாள். இங்கு பெண் விடுதலை இயக்கமும் உழைக்கும் மாதர் அமைப்பும் ஒரு பெரிய ஆர்ப்பாட்டப் போராட்டத்தையே நடத்திப் பார்த்தது. பலன் இல்லை. அதிகாரிகள் சாட்சிகள் இருந்தால் கொண்டு வாருங்கள் என்கிறார்கள். சாட்சிகள்! ஓ....''

கடிதத்தை இங்கே நிறுத்திவிட்ட சுலோசனாவுக்குத் திடீரென்று தனக்கு என்ன நேர்ந்தது என்பதே தெரியவில்லை. 'தானே நேரே போய், அவனை ஒரு கத்தியால் குடலைக் கிழி....' என்று நினைப்பது தெரிந்தது. ஆனால் பிறகு?

உடல் தடதடவென்று நடுங்கியது. பல் கடுங் குளிரில் அடிப்பது போல் அடித்துக் கொண்டது. தலை கிறுகிறுத்துக் கொண்டு வந்தது. செய்வதறியாது சோபாவில் சாய்ந்தவளுக்கு வியர்வை அருவியாய்க் கொப்பளித்துக் கொட்டியது. மயக்கமாகியது.

வீட்டில் வேலைக்காரியும் வெளியே சென்றிருந்ததால் இவளது மயக்கம் தானாகத்தான் தெளிய வேண்டியிருந்தது. அப்படித் தெளிய ஆரம்பித்து மீண்டும் பிரக்ஞை வர ஆரம்பித்தபோதோ தலையை அசைத்த திசையிலெல்லாம் அது சுருண்டு சுருண்டு உருள்வது போலிருந்தது. கைகால்கள் மரத்து விட்டது மாதிரியிருந்தது. பிரக்ஞை வந்தும் நீண்ட நேரம் அதே நிலையில்தான் இருந்தாள்.

வெளியே சென்று திரும்பிய வேலைக்காரி இவளது நிலையைக் கண்டு பதறிவிட்டாள். 'என்னங்க அம்மா, என்னங்க அம்மா' என்று திரும்பத் திரும்பக் கேட்டவளுக்கு இவளால் பதில் சொல்ல முடியவில்லை. இவள் பதில் பேசாது, அந்த நிலையில் அவளையே வெறித்துப் பார்த்தது அவளைப் பயமுறுத்திவிட்டது. அவள் பின்னாட்களில்தான் சொன்னாள். 'பேயி கீயிதான் அண்டிடுச்சோ என்னு வோன்னு எங் குலையே பதறிப்போச்சும்மா' என்று.

வேலைக்காரி அரண்டு போவது இவளுக்கும் உணர்வாகவே இவள் மெல்லச்சிரமப் பட்டுக் கையை அசைத்துத் தண்ணீர் கேட்டாள். அதன் பிறகுதான் அவள் ஓடிப் போய்த் தண்ணீர் கொண்டு வந்ததுமல்லாமல், இவளை நிமிர்த்தி உட்கார வைத்து சிசுருட்சைகள் செய்ய ஆரம்பித்தாள். விரைவாகக். காப்பி போட்டுக் கொண்டு வந்து கொடுத்தாள்.

''ஏம்மா, உடம்புக்கு என்னங்கம்மா?''

''ஒன்னுமில்ல பொன்னுத்தாயி.''

இவளுக்கு மீண்டும் தெளிவாக வந்த முதல் நினைவு, 'அவர் வருவதற்குள் கடிதத்தை மறைத்து விட வேண்டுமே' என்பது.



சமையலறைக்குப் போவதற்காக வேலைக்காரி கீழிறங்கியபோது இவள் முன்னால் டீபாயில் கிடந்த அந்தக் கடிதத்தை எடுத்து மெதுவாகவும் நிதானமாகவும் போய், புத்தக ஷெல்ஃபில் புத்தகங்களுக்குப் பின்னால் இருந்த இடைவெளியில் போட்டாள். போட்டுவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த போது டெலிபோன் மணி அடித்தது. இவள் அதை எடுத்து ஈனமான குரலில் கேட்டாள். ''ஹலோ....''

''நான்தான் பேசறேன் கலோசனா.''

''சொல்லுங்க.''

''என்ன ஒரு மாதிரியா பேசுறே?''

''ஒண்ணுமில்லியே.''

அதற்குள் எதனாலோ திரும்பி வந்திருந்த பொன்னுத்தாயி ''என்னம்மா அப்பிடிப் படுத்திருந்து விட்டு ஒண்ணுமில்லேன்னு சொல்றீங்க? ஐயாவை வரச் சொல்லுங்க அம்மா'' என்றாள்.

ஏதோ பொன்னுத்தாய் பேசுவதும் தன் காதில் விழ வரதராஜுலு அழுத்திக் கேட்டான்: ''வாட் ஹேப்பண்ட்? டெல் மீ''

''ஒண்ணுமில்லே. எதனாலோ திடீர்னு கொஞ்சம் உடம்பு படபடன்னு வந்தது. படுத்திருந்தேன். அவ்வளவுதான்.''

''நோ, நோ'' என்றவன் போனை வைத்து விடுவது தெரிந்தது. அதாவது உடன் புறப்பட்டு வருகிறான்.

வந்தவன், ''என்ன என்ன'' என்றான்.

'' ஒண்ணுமில்லிங்க.''

''என்ன ஒண்ணுமில்லே.''

''எதாச்சும் அலர்ஜியா இருக்கும்னு நெனைக்கிறேன்.''

''எதுவும் சீரியஸா இருந்தா டாக்டரைக் கூப்புடலாமானுதான கேக்குறேன்.''

''அதெல்லாம் ஒண்ணும் வேணாம். போட்டுக் கலாட்டாப் பண்ணாதீங்க. நல் ஐயாம் ஆல்ரைட்.''

அதற்குப் பிறகு வரதராஜுலுவும் வற்புறுத்தவில்லை. மாலை இவளுக்கே தான் சரியாகி விட்டது போல்தான் இருந்தது.

ஆனால் இரவு? அவள் கற்பனைகூடச் செய்யாத அளவுக்கு அவளைப் படுத்திவைத்து விட்டது. முன்னிரவிலேயே வந்த கனவுகளாலும் குழப்பங்களாலும் அவள் அரண்டு போனாள். கனவுகள்தான் எப்படிப்பட்ட கனவுகள்! எவ்வளவு பயங்கரமான கனவுகள், அருவறுக்கத்தக்க கனவுகள். ஒரு கனவில் சாமியார் மாதிரியோ பேய் மாதிரியோ இருக்கும். ஒன்று ஒரு உட்காரும் பலகையில் அந்தரத்தில் உட்கார்ந்து கொண்டு தலை கீழும் நேருமாகச் சுற்றுகிறது. ஏதோ ஒரு மிருகம் சொரி சொரியாய், பார்த்தாலே மண்டை அரிக்கிற மாதிரி நிற்கிறது. ஒரு தடவை அந்த ரகுவை இந்த வரதராஜுலு சுட்டுக் கொன்றுவிட்டு ஜெயிலுக்குப் போகிறான். போகும்போது வந்து பேசிக்கொள்கிறேன் என்று இவளைப் பார்த்து முறைக்கிறான். விழித்துக் கொண்டபோது அவளுக்குத் தான் யார் என்ற நினைவு வரவே நீண்ட நேரமாயிற்று. அப்புறமும் இருந்த இடம் தெரியவில்லை. அதுவும் நினைவுக்கு வந்தபோது, ஓடி மாடியிலிருந்து குதித்து விடுவோமோ என்று பயமாக இருந்தது.

அவள் வரதராஜுலுவை எழுப்பி, ''தூக்க மாத்திரை வேணுமே' என்று கேட்டாள்.

''இது என்ன புதுப் பழக்கம்?''

''இல்ல, வேணும். தூக்கமே வரல. விடிந்தாலும் தூக்கம் வராது போல இருக்கு.''

''எல்லாம் வந்துடும். இந்த மாதிரி மாத்திரையை எல்லாம் பழக்கப் படுத்திக்கக் கூடாது.''

''ஐயோ, இப்ப எனக்குப் பைத்தியமே பிடிச்சுடும் போல இருக்குங்க.''

அவளது குரலால் அதிர்ச்சி யடைந்த வரதராஜுலு எழுந்து சுவிட்சைப் போட்டான்.

அவளது முகம் அசாதாரணமாக இருந்தது தெளிவாகத் தெரிந்தது.

அவன் சென்று டாக்டருக்கே ஃபோன் செய்தான். இவளும் அதைத் தடுக்கவில்லை.

டாக்டர் வந்ததும் இவள் அப்போதைய கனவுகளையும் குழப்பங்களையும் மட்டும் சொன்னாள். காலையில் நடந்ததில் தனக்குத் தெரிந்ததை வரதராஜுலு சொன்னான்.

கடைசியாக 'ஆல்ரைட்' என்ற டாக்டர் கலோசனாவிடம் ''நீங்க கேட்ட மாத்திரையவே தர்றேன் சாப்பிடுங்க. சரியாப்-போயிடும்'' என்று சொல்லித் தந்துவிட்டு, கீழே வந்ததும் வரதராஜுலுவிடம் ''இதுக்கெல்லாம் காரணத்தை நாம ஒண்ணும் உடனடியாத் தீர்மானம் பண்ணிற முடியாது. இருக்கட்டும், அதை அப்புறம் பார்ப்போம். தூக்க மாத்திரைதான் கொடுத்திருக்கேன். ஒண்ணும் டிரபிள் இருக்காதுன்னு நெனைக்கிறேன். அப்படித்தேவைப்பட்டா தயங்காம போன் பண்ணுங்க'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

அவர் சொல்லியபடியே அதற்குப் பிறகு அன்றிரவு அவளுக்குத் தொந்தரவு இல்லை தான். விரைவிலேயே ஆழ்ந்து தூங்கி விட்டாள்.

அதற்கடுத்த நாளும்கூட ஏதும் தொந்தரவோ பிரச்னையோ இல்லைதான்—இரண்டு மூன்று நாட்கள் பலவீனமும் சோர்வுமாக இருந்ததைத் தவிர.

ஆனால் மெல்ல மெல்ல அவளிடம் ஒரு புதிய குணம் உருவாகி வந்ததைச் சீக்கிரமே மற்றவர்கள் உணர ஆரம்பித்தார்கள். எடுத்ததற்கெல்லாம் சிடுசிடுக்கிற, எரிந்து விழுகிற குணம். தன் கட்சியைக் கடைசி வரை நியாயப்படுத்துகிற குணம்.

ஓர் இரண்டு மாத வாக்கில் பொன்னுத்தாயியே, வரதராஜுலுவிடம், கலோசனா இல்லாத ஒரு சந்தர்ப்பத்தில் சொன்னாள், ''எஜமான். அம்மாவுக்கு எதுனாச்சும் காத்து கீத்து அண்டிருச்சானு பாருங்க. அவுங்க பழைய மாதிரியா இருக்காங்க? முன்னயெல்லாம் இப்பிடியா தொட்டதுக்கெல்லாம் எரிஞ்சு விழுந்தாங்க. கலாட்டா செஞ்சாங்க'' என்று.

அவள் 'கலாட்டா' என்று சொல்லக் காரணமாக இருந்த நிகழ்ச்சி அன்றையதினத்திற்கு இரண்டு நாள் முன்பாக நடந்தது.

அன்றைக்குப் பரமசிவன் என்கிற வரதராஜுலுவின் நண்பன் ஒருவன் இவர்கள் வீட்டுக்கு விருந்தாக வந்திருந்தான். அவன் ஏதோ ஒரு அரசாங்க இலாகாவில் மானேஜராக வேலை பார்ப்பதாக அவனைப் பற்றி ஒரு நாள் வரதராஜுலுவும் இன்னொரு நண்பனும் இவர்கள் வீட்டிலேயே பேசிக்கொண்டிருந்ததை இவள் கேட்க நேர்ந்ததால் சுலோசனாவுக்குத் தெரிய வந்திருந்தது.

அன்று வரதராஜுலுவும் அந்த நண்பனும் இந்த நண்பனைப் பற்றி வரவேற்பறையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். சுலோசனா அதையொட்டிய அறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

அந்த ஆளுக்கு ஒரு கள்ளக் காதலி இருக்கிறாளாம். அவனது மனைவி ஒரு பத்து நாள் தாய் வீட்டில் தங்கும் உத்தேசத்தோடு பிறந்த ஊர் போயிருந்தபோது இந்த ஆள் இந்தக் கள்ளக் காதலியை வீட்டிற்கே அழைத்து வந்து குடும்பம் நடத்த ஆரம்பித்திருக்கிறான். ஆனால் ஒரு நாள் அதிகாலை மனைவியானவள் திடீரென்று முன் அறிவிப்பின்றி வந்துவிட அங்கு நடந்த கதையை வரதராஜுலு சொன்ன விதம் அதை இவனொரு வீர சாகஸமாகக் கருதுகிறானோ என்று நினைக்கும்படி இருந்தது.

''இங்க எர்லி மார்னிங். சிக்ஸ் ஓ கிளாக் இருக்கும். இவரு ஐயா இன்னும் படுக்கையிலே இருக்காரு. அந்தக் காதலியம்மா எந்திரிச்சு குளிச்சு முழுகி, கூந்தல் விரிச்சுக் காயப் போட்டு, காப்பி போட்டுக் கொண்டுவந்து தலைமாட்ல இருந்த ஸ்டூல்ல வச்சுட்டு, காலடியில உக்காந்து கால் பிடிச்சு விட்ட மாதிரியே காதலன் முகம் பார்த்துச் சிரிக்கிறாங்க. கதவைத் தாழ்ப்பாள் போடக் கூட இல்லை. இவன் ஒய்ஃப் வந்து கையில சூட் கேஸோட முன்னாடி நிக்கிறா.

''எப்படி இருக்கும்? அந்த ஒய்ஃபுக்கு மட்டுமல்ல: இவங்க ரெண்டு பேருக்கும் கூடத்தான். பய மொதல்ல ஆடிப்போயிட்டானும். இருந்தாலும் அப்புறம் எப்பிடி சமாளிச்சு இருக்கான்னு பாரு. அதுதான் சமயம்னு காதலியைக் கட்டின சேலையோட ஓடிடு. அப்புறம் பேசிக்கலாம்னு வெரட்டிட்டான். அப்புறமும் பேசலே. பேசாமப் போயி பல்லை வெளக்கிட்டுக் குளிச்சிருக்கான். சடார்னு சாஷ்டாங்கமா அவ கால்ல வந்து விழுந்துட்டான். 'தப்புத்தான். செஞ்சிருக்கக் கூடாதுதான். என்னமோ புத்தி கெட்டுப் போச்சு. நீ என்ன செஞ்சாலும், சொன்னாலும் நான் அதுக்குக் கட்டுப்படறேன். மன்னிச்சுடு.' அப்பிடின்னு சொல்லிட்டான். இதை அவ எதிர்பார்த்து இருப்பாளா? அவளே கன்ஃபியூஸ் ஆயிட்டாளாம். ஒரு ஒய்ஃபால, இதுக்கும் மீறி ஒரு புருஷன் என்ன செஞ்சுட முடியும்? So all most matter settled இல்லியா?''

இதற்கு வந்திருந்த அந்த நண்பன், 'அந்தக் காதலி என்ன ஆனா?'' என்று கேட்டான்.

''அவ என்ன ஆனா? என்ன ஆவா? அவ பாட்டுக்கு அவ இருக்கா. எப்பவும் பாக்குற எடத்துல இவன் போயி அவளைப் பாத்துக்குறான். நான்கூட ஒரு தடவை, என்னடா, கும்புட்டு விழுந்து சத்தியம் செஞ்சது என்னாச்சுனு கேட்டேன். அதுக்கு அவன் 'சத்தியம் அது பாட்டுக்கு இருக்கு. அது நம்மள என்ன செய்யுது? நாமளாப் போயி அதை நோண்டுனாத்தான் வம்பு. நான் அந்த வேலையெல்லாம் வெச்சுக்கிறதில்லேனு சொல்றான்'' என்று முடித்தான் வரதராஜுலு.

இதைக் கேட்டதும் சுலோசனாவுக்கு என்னும் கொள்ளும் பொரிகிற கோபம். அந்த நண்பன் போனதும் நேராகக் கணவனிடம் வந்தாள்.

''அந்த அயோக்கியன் பண்ணின காரியத்துக்கு ஒங்கக்கிட்ட புகழ்மாலை வேறயாக்கும்?''

''நான் என்ன புகழ்ந்தேன்?''

''புகழாமயா அவன் போட்ட நாடகத்தை அவ்வளவு சந்தோஷமா பிரமாதமா விளக்கிச் சொன்னீங்க?''

''நீ எப்ப இருந்து இப்படி ஒட்டுக் கேக்கற வேலையெல்லாம் ஆரம்பிச்சிருக்கே?''

''ஒட்டுக் கேக்கறதெல்லாம் சரியா தப்பா எங்கிறதெல்லாம் அப்பறம் இருக்கட்டும்!''

''என்ன சொல்லுறே?''

''அந்த ராஸ்கலோட காரியம் ஒங்களுக்குத் தப்பாத் தெரியலையா? ஒங்களுக்குக் கோபம் வரலியா? ஏண்டா நாயி இப்பிடியெல்லாம் செய்றேனு நீங்க அவனைக் கேக்கலியா?''

வரதராஜுலுவுக்கு ஒரு மாதிரி இருந்தது. இதில் இவளுக்கென்ன இவ்வளவு கோபம்? வார்த்தைகள் தடித்துக் கொண்டே போகின்றனவே என்று நினைத்தவன்—

''அது சரி, இதுல ஒனக்கெதுக்கு இவ்வளவு கோபம் – என்னமோ நான் ஒன்னைய ஏய்ச்சுட்ட மாதிரி.''

''நீங்க அதைப் பாராட்டிச் சந்தோஷப் படுறதப்' பார்த்தா சந்தர்ப்பம் வந்தா நீங்களும் அப்பிடித்தான் நடப்பீங்கன்னு தானே அர்த்தமாகுது?''

''சரிசரி. அனுமானம் பண்ணிக்கிறதா இருந்தா எதை வேண்ணாலும் அனுமானம் பண்ணிக்கலாம். பேசாம இரு'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தான் வரதராஜுலு.

(தொடரும்)



கமலா: என்னடி, ரொம்ப நாளா என் கூட பேசவே இல்லே. எங்கேயாவது ஊருக்குப் போயிருந்தாயா?

பிரியா: இல்லே. போன் பேசறதுன்னாலே பயமா இருக்கு. இனிமே ஏதாவது வேணுமின்னா இருந்தா லெட்டரே போட்டு விடுகிறேன்.

-சுந்தரேசன்

# இரட்டைக் காவலைகள்

எஸ்.வெறலன்

தேவிக்குத் தேகமெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது.

தன்னால் அது சாத்தியமா? என்ற எண்ணம் வந்ததும் அதையும் அழித்துக் கொண்டு மற்றோர் எண்ணம் விசுவரூபம் எடுத்து அதை விழுங்கியது.

ஆமாம்! அந்தக் கல்லூரி, பப்ளிக் பிகேவியர், Manness எல்லாம் 'அப்படி.' அப்படித்தானும் என்று யாரோ சொன்னது வேறு அவளைத் திணற அடித்திருந்தது. அவமானப்படப் போகிறோமோ என்று எண்ணம் விழுந்தது.

கல்லூரி முதல்வர் கேட்டபோது கேள்வியில் தெரிந்த நம்பிக்கைக்காகச் சம்மதித்தாள். இப்போது ஏன் சம்மதித்தோம் என அழுகை அழுகையாக வந்தது.

தூத்துக்குடியில் உள்ள ஆண்கள் கல்லூரிகளிலே அது கொஞ்சம் பேர் போனது. வேலைநிறுத்தம், ஆர்ப்பாட்டம் என்றெல்லாம் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் மாணவர் சமுதாயம். அங்கு வைத்துத்தான் சகல கலாசாலைகளுக்கான பட்டிமண்டபம். பேசக் கொடுத்த தலைப்போ...?

மிகப் பயங்கரமான நிலைமையைப் பெண்ணுக்கு உருவாக்கிவிடும்.

தேவி இயல்பிலேயே மென்மையானவள். பெண்கள் மேடையில் பேசும்போது இயல்பான மென்மையும் நளினமும் சேர அழுத்தமாகக் கருத்துக்களைச் சொல்ல வேண்டும் என்பதுதான் அவள் எண்ணம்.

அவள்மீது வைத்த நம்பிக்கையில் கல்லூரி முதல்வர் அவளை முதன் முதலாகச் சகல கலாசாலைகளுக்கான போட்டிக்கு அனுப்புகிறார். முதல்அனுபவமேகோணலாகிவிடுமோ எனத் தேவி பயந்தாள்.

'பெண்கள் முன்னேற்றம் அடையாததற்குக் காரணம் ஆண்களா? பெண்களா?' என்பதில் 'ஆண்களே' என்பது அவளுக்குக் கொடுக்கப்பட்ட தலைப்பு.

நூலகத்தில் உள்ள பல நல்ல புத்தகங்களை அலசித் தீர்த்தது. அன்றையப் பிரச்னைகளை அனுமானம்



ச்செய்து, காரணங்களை 'அனலைஸ்' செய்து அழகாகத் தொகுத்துக் கொண்டாள்.

வீட்டில் மொட்டை மாடியில் உள்ள செங்கற்களை முதலில் 'ஆடியன்ஸ்' ஆக்கிப் பலமுறை பிராக்டீஸ் செய்தாள்.

வீட்டில் அண்ணன் வேறு அவளைக் கிண்டல் செய்யத் தொடங்கினான்.

''தேவி! தயவு செய்து நான் காரை எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன். கல்லடி சொல்லடி எல்லாம் உன்னைக் காயப்படுத்தினால் உடனே டாக்டரிடம் அழைத்துப்போக வேண்டுமல்லவா?''

அழுகை அழுகையாக வந்தது அவளுக்கு.

நாளுக்கு நாள் அதைரியம்தான் கூடியது. நாள் ஆயிற்று. அன்று மாலை....

அழகாக ஒரு சிறு காகிதத்தில் குறிப்புக்களை எடுத்துக் கொண்டாள்.

மாணவர்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. பேச வந்திருந்த அனைவர் முகத்திலும் பரிசு தட்டிச் செல்லும் களை தெரிந்தது. தேவி கூடத் தெம்பாக இருந்தாள்.

ஆறாவது, ஏழாவது வாக்கில் ஒருவன் பேசும்போது அமைதி கலைந்து திடீரென்று ஒரு புறம் புல் முளைத்தது போல் கொத்தாகச் சிலர் எழுந்தார்கள்.

''போதும்மா! வாய் வீச்சு நிறுத்திக் கொள் உன் பேச்சை...'' நாராசமாய்ச் சத்தம் கேட்டது. பலர் அதிர்ந்தனர்.

அடுத்துச் சிலர்... விமரிசனங்கள் பலருக்குக் கடுமையாய்.,சிலருக்குக் கேலியாய்..

ஒரு பெண் எழுந்து மேடைக்கு நடந்து வர அவள் நடையை...

தை, தை தக்கத் தை... என்று தாளம், எழுப்பிக்கேலி ஜாலம் செய்ய,

அழுதுவிடுவாள் போலிருந்தது. அவள் இரண்டே நிமிடங்களில் 'நன்றி' சொல்லி விட்டாள்.

கல்லூரி முதல்வர் மிக சாமர்த்தியமாக நிலைமையைச் சமாளித்துக் கொண்டிருந்தார்.

நம்பிக்கை தூளாகி விட்டபோது அவள் நேரம். மேடையில் ஏறியவுடன் நடுக்கம் தொண்டையை அடைத்தது. எழுதி வைத்ததெல்லாம்அவளுக்கு மறந்துவிட்டது.

நீள நீளமாய் எழுதி வைத்த அடைமொழிகள் தொண்டையில் அடைத்துக் கொள்ள,

மாணவர்கள் 'கூக்... கூக்' எனக் குரல் எழுப்பியபோது,

அவள் பேச ஆரம்பித்தாள்.

''அவைக்கு என் வணக்கங்கள். எனக்குப் பேசக் கொடுத்த தலைப்பைக் கண்டதும் மிரண்டேன். ஆனாலும் பெண்கள் முன்னேறாததற்குக் காரணம் ஆண்கள்தாம் — இது திருத்தமான உண்மை!''

எதிர்ப்பாய்ச் சிறிது சிறிதாய் இரைச்சல் கிளம்பியது.

தன் குரலில் அழுத்தம் ஏற்றினாள். இந்தத் தலைப்பை உங்கள் முன் பேச எனக்கு எப்பேர்ப்பட்ட தைரியம்....

''ஆமாம்!'' எனக் கோரஸ் கேட்டது.

''ஆனாலும் பேசுகிறேன்'' என்றாள்.

''ஏன்?'' என்று ஒரு குரல் திருத்தமாகக் கேட்டது.

''ஏனென்றால்நீங்களெல்லாம்நல்லவர்கள், வல்லவர்கள், நேர்மை தெரிந்தவர்கள், நியாயம் புரிந்தவர்கள், அறிவில் தெளிந்தவர்கள், ஆர்வம் நிறைந்தவர்கள், அடக்கம் உடையவர்கள்....''

கலையரங்கம் ஏ. ஸி. மாற்றப்பட்டது போல் ஒரு ஜில்லிப்பு.

அடுத்த நிமிடம் பேரமைதி சூழ... அவள் பேசிக் கொண்டே இருந்தாள். பத்து, இருபது, முப்பது நிமிடங்கள் வரை.

பேசி முடித்ததும் ஒரு நிமிடம் ஒரு பயங்கரமௌனம்.அடுத்த விநாடிகைகள் தட்டிய ஓசையில் கலையரங்கம் நிலைகுலைந்தது.

துள்ளித் திமிறிய காளையை எங்கு எப்படி அடித்தால் அடங்கும் என்னும் சாகசத்தைத் தெரிந்து வைத்திருந்த தேவியும் இளைய சமுதாயத்தைச் சேர்ந்தவள் தானே!




இடம் மாறியிருக்கும் கட்டங்களை வரிசைப்படுத்த முயலுங்கள்!

விடை: 1-D, 2-B, 3-F, 4-C, 5-H, 6-G, 7-A, 8-E

# புள்ளிகள் செய்திகள்

## ஜீவானந்தன்

எம்.ஏ. முடித்தபிறகு தற்போது கோவை சட்டக் கல்லூரியில் பி. எல். இறுதி ஆண்டு மாணவர். ஆயினும் அதிகம் விரும்பும் துறை ஓவியம். இந்த ஆர்வம் தந்தை வழி சொத்து.

கோவை 'சினி ஆர்ட்ஸ்' என்ற பேனர்கள் எழுதும் கம்பெனியின் அதிபராகவும் 'சீஃப் ஆர்ட்டிஸ்ட்' ஆகவும் இருக்கிறார் ஜீவானந்தன். கோவை மாவட்ட 'சித்ரகலா அகாடமி'யின் காரியதரிசி. இலக்கிய ரசனையும் உடைய இவர் கல்கி வாசகர்களுக்கு அதிகமாக அறிமுகமானது 'சிந்து-ஜீவா' என்ற பெயரில் எழுதிய திரைப்பட விமர்சனங்கள் மூலமாக.

-மார்ஷல்

## சண்முகம்பிள்ளை

படிக்காதவர் என்றாலும் வறு கடலைத் தொழிலில் பல்லாண்டு அனுபவம் பெற்றவர். தாமாகவே பெரிதும் முயன்று வறு கடலை இயந்திரம் ஒன்றைக் கண்டுபிடித்தார். இதனால் மணிக்கு நூற்றுக் கணக்கான மூட்டை கடலையைச் சிறந்த முறையில் வறுக்க முடிந்தது. இந்தக் கண்டுபிடிப்புக்காக மத்திய அரசு இவருக்குப் பரிசும், சான்றிதழும் வழங்கிக் கௌரவப்படுத்தியது.

இன்று இந்தியாவின் பல மாநிலங்களிலுமாக 250 இடங்களில் இவரது இயந்திரங்கள் செயல்பட்டு வருகின்றன. வறு கடலை மட்டுமின்றிச் சோளம், கொண்டைக் கடலை போன்றவற்றையும் இதில் வறுக்க முடியும்.

அயல் நாடுகளிலிருந்து வரும் எரிபொருளான பெட்ரோலியம் எண்ணெய் விலை நாளுக்கு நாள் உயர்வதால் மாற்று எரிபொருள் பல தொழில்களில் தேவைப்படுகிறது. நெய்வேலி லிக்கோ கரி சில தொழிலகங்களில் (எங்கே வெப்பத்தைக் குறிப்பிட்ட அளவுக்கு வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லாதிருந்ததோ அங்கு மட்டுமே) உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால் வறுகடலைத் தொழிலில் வெப்பம் அதிகமாகிவிட்டால் பொருள் கருகி நாசமாகிவிடும்.

பல மாத முயற்சிக்குப் பின் இவர் கட்டுப்பாடு வெப்பம் தேவைப்படும் தொழிலிலும் நெய்வேலி லிக்கோ கரியை எரிபொருளாக உபயோகப்படுத்துவதில் வெற்றி கண்டார்.

இதற்காக நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் இவருக்கு ஒரு பாராட்டு விழாவை நடத்தியது. கேடயம் வழங்கியது. சண்முகம் பிள்ளையின் கண்டுபிடிப்பு எரிபொருள் செலவைக் குறைப்பதுடன் அந்நியச் செலாவணியையும் மிச்சப்படுத்துகிறது.

தகவல் : எஸ். ஜெயசந்திரன்

## என். சுப்ரமணியம்

வெண் பஞ்சை ஒட்டவைத்தாற் போன்ற தாடி. வயோதிகத்தைப் பறைசாற்றினாலும் வலிமை குன்றவில்லை என்பதை இவரது கண்களின் பிரகாசம் உணர்த்துகிறது.

அதனால்தானோ என்னவோ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளை இவர் தரிசிக்கச் சென்றபோது ''இந்து மதத்தின் பரந்த நோக்கம் பற்றிப் பிரசாரம் பண்ணலாமே'' என்று ஆக்ஞாபித்திருக்கிறார் – தகுதி அறியாமலா கூறுவார்?

கட்டளையை ஏற்றுத் தமிழ்நாட்டில் ஊர் ஊராகச் சென்று பிரசாரம் செய்து திரும்பிய மதுரமித்திரன் என். சுப்பிரமணியம் அவர்களை நண்பர்கள் இணைந்து விழா எடுத்துச் சிறப்பித்தார்கள். பாராட்டிப் பரிசு வழங்கியவருள் ஒருவர் அபஸ்வரம் ராம்ஜி.

வயோதிகப் பருவத்தினரும் காலத்தை வீணாக்காது தம்மால் இயன்ற அளவில் சமுதாயத்துக்குப் பயனுள்ள ஏதேனும் ஒரு பணி ஆற்றலாம் என்பதற்கு ம. மி. சுப்பிரமணியம் எடுத்துக்காட்டு.

✖ ஜீவானந்தன் ✖ சண்முகம் பிள்ளை ✖ என். சுப்பிரமணியம்








திரைஞானி — சினிமா

ஊழல் புரியும் பேர்வழிகளிடமிருந்து பணத்தைப் பெற்று, பாதிக்கப்பட்டவர்களுக்குப் பட்டுவாடா செய்யும் தினதயாளு வேடம் சிவாஜிக்கு.

சிகரெட்டைப் புகைத்து ஊதிவிட்டு, கையை உயர்த்தி, விரலைச் சொடுக்கி, கண்கள் சிவக்க 'முத்து... கிருஷ்ணு...' என்னும் அந்த வித்தியாசமான வில்லத்தனத்துக்கு இழுத்து இழுத்துப் பேசும் வசன உச்சரிப்பு ஸ்டைல் கை கொடுக்கிறது அதோடு சரி.

மீண்டும் சுஜாதா. தன் கணவன் மீது கொண்டுள்ள நம்பிக்கை களங்கப்படும் போது ஒரு நல்ல மனைவி எப்படித் துடிப்பாரோ... அப்படியே!

கழுத்தைச் சுற்றிய பாம்பு. ஆம்! 'அலைகள் ஓய்வதில்லை' தியாகராஜனுக்கு அந்தப் பாம்பு வேடம் கன கச்சிதம்! கழுத்தை விட்டு இறங்கிச் சீறும் கட்டங்களில் 'மரியாதையாகவே' சீறியுள்ளார்.

சிவாஜி கணேசனைச் சுற்றி இளைய தலைமுறை நட்சத்திரங்களை வட்டமிட வைத்திருப்பதற்காகத் தயாரிப்பாளர்களைப் பாராட்டலாம். மோகன், அம்பிகா, தியாகராஜன், ராஜலட்சுமி....

அச்சகத்திலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு பிழைப்பு நடத்துவதாகக் கூறும் தினதயாளுக்கு அத்தனை பெரிய பங்களாவும் வசதியான வாழ்க்கையும் அமைந்தது எப்படி என்பதற்குக் கதையில் ஆதாரம் இல்லை.

சர்ச்சும், சிலுவையும், மேரியும் சுந்தரத்துக்குப் பேனா 'நிப்' மாதிரி! 'நிப்' இல்லாமல் எழுத முடியுமா?

கோர்ட் காட்சிகளில் கதாநாயகனை அத்துமீறிப் பேசச் சொல்லிவிட்டு அதற்குப் பரிகாரமாக அவனுக்குத் தண்டனையும் கொடுத்து விடுகிறார் சுந்தரம்.

மார்லன் பிராண்டோ நடித்த காட்ஃபாதர் (God father) கதை இது என்று சொல்லிக் கொள்கிறார்கள். படத்தைத் தயாரித்தவர்களுக்கு காட்ஃபாதரும் புரியவில்லை. அதைத் தழுவிப் படம் எடுக்கவும் தெரியவில்லை.

## விமர்சனம்



# திருடா சௌக்கியமா?




### பனியில் சிக்கிய ரதி

பம்பாயில் நடைபெற்ற 'ஏக் துஜே கேலியே' வெள்ளி விழாவில் கலந்துகொண்ட பிறகு பாலசந்தரைப் பார்த்தேன்.

''முப்பத்தேழு வாரங்கள் முடிந்து படம் ஓடிக்கொண்டிருக்கிறது. வெள்ளிவிழாவைத் தாமதமாகக் கொண்டாடி யிருக்கிறார்கள்'' என்றார். விழாவுக்கு கனில் தத் தலைமை தாங்கினாராம்.

''கமல் வந்திருந்தார். ஆனால் ரதி வர வில்லை. சிம்லாவில் படப்பிடிப்பிலிருந்து வரஇயலாமல் வழியில் பனி மூடியிருக்கிற தாம்'' என்றார்.

அத்தனை பெரிய விழாவுக்குப் பனி ஒரு தடையா?

### ஸ்ரீதர் கையில் கல்கி

'நினைவெல்லாம் நித்யா' படப் பிடிப்பில் கார்த்திக் 'கல்கி' படித்துக் கொண்டிருந் தார். அந்த அறைக்குள் தற்செயலாக நுழைந்த டைரக்டர்ஸ்ரீதர் கார்த்திக் கையி லிருந்த கல்கியை வாங்கி அவசர அவசர மாகப் பக்கங்களைப் புரட்டினார். அபர்ணா நாயுடு எழுதிவரும் 'நினைவெல்லாம் நித்யா' சித்திரத்தொடர் கதைப் பகுதியை என் னிடம் காட்டி ''பார்த்தீர்களா சார்! இதே படத்தின் தலைப்பு. ஒரே மாதிரி ஐடியா ஒரே சமயத்தில் இரண்டு பேருக்குத் தோன்றியிருக்கிறது. பார்த்தீர்களா?'' என் றார்.



### படம் முடியும்போது....

'நான் குடித்துக் கொண்டே இருப்பேன்' படத்தை வெளியிடப் படாத பாடு பட்ட கடலூர் புருஷோத்தமனுக்கு அப்படம்வெளி வந்த பிறகு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை யாம்!

படம் முடியும்போது நான் தோன்றி ''ஐயா, நில்லுங்க... அம்மா நீங்களும்தான்! உங்க வூட்லே குடிக்கிறவங்க யாராவது இருந்தா இந்தப் படத்துக்கு அனுப்புங்க.'' என்கிறேன். தியேட்டர்ல படம் பார்க்கற வங்க எழுந்து ''எங்க வூட்லே எங்க அப்பா குடிக்கறாரு; அனுப்பறேன்''; ''எங்க வூட்ல நாலு பேரு இருக்காங்க அனுப்பறேன்'' என்று திரையிலே தெரியற பொம்மையோட பேசறதை நான் இந்தக் காதாரக் கேட் டேன். எந்த அளவுக்கு நான் சொன்ன கருத்து அவங்க மனசிலே பதிந்திருந்தா அப்படிப்பேசியிருப்பாங்க''என்றார் உணர்ச்சி வசப்பட்டவாறு.



### அடித்தது யோகம்!

எழும்பூரிலுள்ள 'குருஜி' புக் ஸ்டாலில் நின்றவாறே பேப்பர் படித்துக் கொண்டிருந்தார் கண்ணன். அந்தச் சமயம் பார்த்து டைரக்டர் பாரதி ராஜா தம் உதவியாளர் மனோகர், மணிவண்ணன், சித்ரா லட்சுமணன் ஆகியோருடன் இந்திப் படம் பார்க்கப் போய்க் கொண்டிருந்தார்.

அசப்பில் கண்ணனைப் பார்த்த மனோகர் டைரக்டரிடம் அவரைச் சுட்டிக் காட்ட, காரை நிறுத்தச் சொல்லிச் சில நிமிடங்கள் அவரையே பார்த்தார். 'காதல் ஓவியம்' படக் கதையில் தாம் கற்பனை செய்து வைத்திருந்த அதே கதா பாத்திரம் மாதிரி மீசை தாடியுடன் அவர் காணப்பட்டார். கண்கள் தான் அவருக்கு அளவுகோல். அளந்தார்.

மறுநாள் கண்ணன் அவர் சொன்ன மாதிரியே பாரதி ராஜாவைச் சந்திக்க, அவரைத் தமது படத்தில் கதாநாயகனாக ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டார்!

### தலைப்பாகைகளுக்கு நடுவே ராஜ்குமார்!

சுமார் ஐந்நூறு தலைப்பாகை அணிந்த நடிகர்களைச் சேர்ந்த—மாதிரி பார்த்துவிட்டு அசந்துபோய் நின்றேன். அடேயப்பா! எத்தனை பெரிய அரங்கம்! எத்தகைய ஜோடனைகள்! இப்படி ஒரு செட்டை ஸ்டுடியோவில் பார்த்து எத்தனை நாட்களாகின்றன!

அந்த மாபெரும் கூட்டத்துக்கு நடுவே கையில் ஓலைச் சுவடியை வைத்துக் கொண்டு அதே மாதிரி தலைப்பாகை அணிந்து நின்று கொண்டிருந்த கன்னட நடிகர் ராஜ்குமாரை அடையாளம் கண்டு பிடிக்க ஐந்து நிமிடங்களாயிற்று. காளிதாஸராக நடித்துக் கொண்டிருந்தார்.

''இன்னமும் ஒரு மாதத்துக்கு இங்கு தான் தங்கப் போகிறேன்'' என்றார் ராஜ்குமார்.

தயாரிப்பாளர் சீனிவாசன் எனக்கு நன்கு பரிச்சயமானவர். முன்பு பி. எஸ். ரங்காவிடம் பணியாற்றிக் கொண்டிருந்தவர். இன்று மாபெரும் தயாரிப்பாளராக என் முன் நின்றவர், ''ராஜ்குமாரைப் பார்த்துப் பேசவேண்டுமானால் முன்கூட்டியே இந்த அம்மாவிடம் ஒரு வார்த்தை சொல்லி விடுங்கள்'' என்று வெளியில் மரத்தடியில் நாற்காலியில் அமர்ந்திருந்த ஒரு அம்மையாரைச் சுட்டிக் காட்டினார். அவர்தான் 'மிஸஸ்' ராஜ்குமார் என்பதைப் புரிந்து கொண்டேன்.

அவரைப் பார்த்துப் பேசினேன். மாநிறத்தில் மிக மிக எளிமையாகக் காணப்பட்ட அவர் அழகான தமிழில் என்னிடம் பேசினார்.

காட்சிக்குத் தேவைப்படும் சால்வை ஒன்றை வாங்கத் தான் பாண்டி பஜார் வரை போக விரும்புவதாகக் கூறிவிட்டு 'ஷாட்' முடிந்ததும் 'உள்ளே போங்கள்' என்றார்.

ராஜ்குமாருக்கு நல்ல ஞாபகசக்தி. பல வருடங்களுக்கு முன்பு எம். ஜி. ஆர். நடித்த 'மீனவ நண்பன்' படத்துக்காக அவருடன் உடுப்பி சென்றிருந்தபொழுது நான் தங்கியிருந்த சாதாரண ஓட்டலில் அவரும் தற்காலிகமாகத் தங்கியிருந்தார். அப்போது சந்தித்ததை நினைவுபடுத்திக் கொண்டார்.

### டி. ராஜேந்தர் நடித்தார்!

வீனஸ் ஸ்டுடியோவில் பாட்டிலைக் கையில் வைத்துக்கொண்டு குடிகாரன் மாதிரி நடித்துக்கொண்டிருந்தார் அப்பட டைரக்டரான டி. ராஜேந்தர். படம்: 'நெஞ்சில் ஓர் ராகம்'

நடித்து முடித்துவிட்டு என்னிடம் வந்தவர் ''நான் நிஜக் குடிகாரன் இல்லே. எனக்குக் குடிக்கத் தெரியாது. ஆனால் நடிக்கத் தெரியும். என் நண்பர் ஒருவர் நிறையக் குடிப்பார். ஆனால் குடித்துவிட்டுத் தப்புச் செய்ய மாட்டார். பெண்களிடம் மரியாதையாக நடந்துகொள்வார். அவருடைய காரெக்டரை அப்படியே இதில் செய்து காட்டுகிறேன்'' என்றார்.



## சினிமாவில் பெண்கள் - ஒரு கேள்வி

சினிமாவில் பெண்கள் என்ற தலைப்பில் சென்னையில் நடைபெற்ற 'சர்வதேசப் பட விழா'வில் இரண்டு படங்களை மட்டும் பார்த்தேன்.

ஒன்று 'போர்ட்ரெய்ட் ஆஃப் தெரஸா'. கியூபா நாட்டுப் படம்.

கதாநாயகி தெரஸா பாக்டரியில் பணியாற்றிக் கொண்டுநடனப் பள்ளிநடத்துவது போன்ற இதர பணிகளிலும் ஈடுபடுகிறாள். கணவன் டி. வி. மெக்கானிக். காலையிலிருந்து இரவு வரை மனைவி வீட்டுக்கு வராமல் தன்னைத் தனிமைப்படுத்துவதை அவன் வெறுக்கிறான். சண்டை நிகழ்கிறது. அதற்குப் பிறகு அவன் வேறு ஒரு பெண்ணிடம் தொடர்பு வைத்துக் கொள்கிறான். மனைவி கணவனைப் பார்த்து ''நீ செய்த தவறையே நானும் செய்தால் என்ன ஆகும்?'' என்று கேட்கிறாள்.

மற்றொன்று 'மோன் அண்ட் ஈஜோ'– ஜப்பான் படம். தவறான முறையில் கருவுற்ற சகோதரியை அவளுடைய சகோதரன் கேவலப்படுத்துகிறான். வீட்டைவிட்டுத் துரத்துகிறான். அவள் பிறந்த மேனியோடு நடனம் ஆடிப் பிழைக்கிறாள்.



ஒரு பானை சோற்றுக்கு இரண்டு பருக்கைகளைப் பதம் பார்த்த பிறகு...

பெண்களின் உரிமைகளைக் காக்க பெருமைகளை நிலைநாட்ட இப்படிப்பட்ட படங்களைத்தான் திரையிட வேண்டுமா என்கிற கேள்வி எழுகிறது.

'சினி உமன்' பத்திரிகையில் மீராதவன் எழுதியுள்ள கட்டுரையில் ''எத்தனை நாளைக்குத்தான் பெண்கள் திரையில் கற்பழிக்கப் படுவதையே காட்டுவார்கள்?'' என ஆதங்கப்பட்டுள்ளார். அப்படிக் கேட்டுவிட்டுத் தொடர்ந்து பெண்கள் சித்ரவதைக்கு ஆளாகும் படங்களையே காட்டுவதை விட அவர்களது பெருமைகளை விளக்கும் படங்களைத் தேடிப் பிடித்துத் திரையிட்டு இப்படியும் படங்கள் எடுக்கலாம் என்றல்லவா உணர்த்த வேண்டும்?

# பார்வையின் மறு பக்கம்

லுக் அட் மை ஐஸ்.

கதாநாயகன் விஜயகாந்த் கண்களை அகலப்படுத்திக் கொள்கிறார்.... எதிரில் நிற்பவர் தம் நிலை மறந்து அவர் வசப்படுகிறார். முதலில் ஸ்மிதா.

கருள் கருளாகச்சிகரெட் புகையை ஊதித் தள்ளிக் கவர்ச்சியைக் கொட்டித் தீர்க்கும் அவர்... தண்ணீர்த் தொட்டியில் தானே அமிழ்ந்து ....

ஒரு கொலை நிகழ்கிறது.

லுக் அட் மை ஐஸ்...

இரண்டாவது கொலை நிகழ்கிறது.

லுக் அட் மை ஐஸ்...

மூன்றாவது கொலை!

லுக் அட் மை ஐஸ்!

ஸ்ரீப்ரியாவிடம் மட்டும் அவனது ஹிப்னடிசம் பலிப்பதில்லை. அதற்குள் அண்ணனே அவனைச் சுட்டுவிடுகிறான். விஜயகாந்த் ஓடுகிறார். போலீஸ் அவரையும் சுட்டு வீழ்த்துகிறது.

படத்துக்கு ஹிப்னட்டிஸ சக்தி இருந்தால் ரசிகர்களை ஈர்த்து 'ஹிட்' ஆகிவிட்டுப் போகிறது!



"சுமார் 150 நாவல்களும், 1600 சிறு கதைகளும் எழுதியுள்ளவர் கோவி. மணிசேகரன். இவர் சமீபத்தில் கடல் கொண்ட லெமூரியா கண்டத்தை வைத்து ஒரு சரித்திர நாவலை, 'தேரோடும் வீதியிலே' என்ற தலைப்பில் எழுதினார். அதைப்படித்துவிட்டுத் தொழிலதிபர் என். மகாலிங்கம் எழுதிய கடிதத்தை எடுத்துத் தந்தார் மணிசேகரன்.

''என் எழுத்துக்கு ஒரு நற்சான்றிதழாய் மட்டுமின்றி, நான் மேலும் 'லெமூரியா' கண்டம் பற்றிய பல சரித்திரப் புத்தகங்களைப் படித்து ஆராய்ச்சி செய்ய ஒருதூண்டு கோலாய் அமைந்தது இக் கடிதம்.

''அவரை இதுவரை சந்தித்திராத நான், கடிதம் கண்டவுடன் அவருடன் பேசிய போது, மிக அபூர்வமான 'ஜேம்ஸ் ஏ. மெக்கினர்' என்பவரது வரலாற்று நூல்களைத் தருவித்துக் கொடுத்தார். அவரது ஊக்கம் காரணமாக, சுமார் 1500 பக்கங்களில் 'லெமூரியா' பற்றிய நாவல் ஒன்று எழுதும் பணியில் ஈடுபட்டிருக்கிறேன்'' என்றார்.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**



# பொக்கிஷம்



அன்புடைய கோவி. மணிசேகரனுக்கு.

வணக்கம்.

உங்களுடைய 'தேரோடும் வீதியிலே' என்ற பெருங் கதை படித்தேன். மகிழ்வுற்றேன். திறமையுடனும், சிந்தனையுடனும் தமிழ் மக்கள் பழங்காலம் குறித்துக் கற்பனையை ஓடவிட்டிருக்கிறீர்கள். மகிழ்ச்சி.

தமிழருடைய பழங்காலத்தைக் கற்கால அநாகரிகமாக்கிய சில நூல்களைப் படிக்க முடியவில்லை.

இப்போது லெமூரியா பற்றி மேலும் செய்திகள் அதிகம் உள்ளன. சிறிது ஆராய்ச்சியுடன் மதுரை மாநாட்டில் பேசினேன். ஒரு புத்தகமாக்கி அப்பேச்சினை வெளியிட்டுள்ளேன். இத்துடன் அனுப்பியிருக்கிறேன். படிக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நீங்கள் பழந்தமிழ் மக்கள் சரித்திரம் பற்றி ஒரு பெரிய புத்தகம் எழுத வேண்டுமென்று கருதுகிறேன். நேரில் பேசி முடிவு செய்வோம்.

உங்கள் திறன் மேலும் உயர்ந்து தமிழ்த் தாய்க்குச் சிறப்பாக அமையப் பிரார்த்திக்கிறேன்.

அன்புடன்

நா. மகாலிங்கம்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

